


Miles Media
SOUTH ASIAN CONNECT

In association with



*Proudly Presents*

# Karthik & Friends

*Live Tamil Music Concert*

## Atlanta

**Saturday, June 23 • 3:00 pm**

**GWCC Sydney Marcus Auditorium**



SIVAMANI



SHAKTHISREE

**Memorial Day Weekend Sale**

**For This Weekend Only!**

Get 1 FREE Movie Ticket With All $59 and Above Tickets!

Also featuring Drums Sivamani and "Nenjukkulle" Shakthisree

**Tickets On Sale:**

VVIP - $129 | VIP - $99 | GOLD - $79 | SILVER - $59 | BRONZE - $39

MEET & GREET ON JUNE 22, FRIDAY - $30

**For Tickets and Sponsorships Contact:**

Madhavi 770-634-3963 | Ganesh 510-205-8743

Jai 404-840-4635 | Kumaresh 404-488-3799

National Promoters




Creativity




Local Sponsor




Native Fashions




Miles Kammi, Smiles Jaashthi!







தமிழ்
எக்ஸ்பிரஸ்
வட அமெரிக்கத் தமிழர்களின் குரல்!

8K தமிழ் எக்ஸ்பிரஸ்
வட அமெரிக்கத் தமிழர்களின் குரல்!

Volume : 3 Issue : 12 June 2018

முதன்மை ஆசிரியர்
**C. ஹரிகிருஷ்ணன்**

ஆசிரியர் குழு
**R.S. ரமணி**
(சென்னை)

**கோவிந்தன் சோமஸ்கந்தன்**
(ஹுஸ்டன்)

**ராம் முத்து**
(டல்லாஸ்)

ஒருங்கிணைப்பாளர்கள்
**உமா ரவி**
(கலிபோர்னியா)
Cell : 1-916-213-7533

**மாதவி குணசேகரன்** (அட்லாண்டா)
Cell : 775-285-6234.

**Sub-Editor**
SHAHARAA SUBBURAJU

**Designer**
S.NANDHINI

விளம்பரம் மற்றும் ஏனைய தொடர்புக்கு:
4309, Hacienda Drive, Suite 150 Pleasanton,
CA 94588, USA.
E-mail : editor@8ktamilexpress.com
advt@8ktamilexpress.com
Cell : 1-732-515-7187

**Sales Head - India**
MOSES PHILIP
Cell : 91-98840 49573
mosesp@8kmilesmedia.com

**Editor In Chief**
C.HARI KRISHNAN
hari@8ktamilexpress.com

**Director**
LENA KANNAPPAN

**CHAIRMAN & PUBLISHER**
SURESH VENKATACHARI

**8K Miles Media Group, Inc., USA**



# கலங்காதே மனமே!

**த**கப்பனே கொலை செய்ய முயற்சித்த போதும் "ப்ரஹ்லாதன்" மனம் கலங்கவில்லை...

சுடுகாட்டு வெட்டியானுக்கு அடிமையாக்கிய போதும் "ராஜா அரிச்சந்திரன்" மனம் கலங்கவில்லை...

பெற்ற பிள்ளையே கேவலப்படுத்திய போதிலும் "கைகேயி" மனம் கலங்கவில்லை...

உறவினர்களே சபை நடுவே அசிங்கப்படுத்திய போதும் "விதுரர்" மனம் கலங்கவில்லை...

அம்புப்படுக்கையில் வீழ்ந்த போதிலும் "பீஷ்மர்" மனம் கலங்கவில்லை...

இளம் விதவையான சமயத்திலும் "குந்திதேவி" மனம் கலங்கவில்லை...

தரித்ரனாக வாழ்ந்த சமயத்திலும் "குசேலர்" மனம் கலங்கவில்லை...

ஊனமாகப் பிறந்து ஊர்ந்த போதிலும் "கூர்மதாஸர்" மனம் கலங்கவில்லை...

பிறவிக் குருடனாக இருந்தபோதிலும் "சூர்தாஸர்" மனம் கலங்கவில்லை...

மனைவி அவமானப்படுத்திய போதிலும் "சந்த் துகாராம்" மனம் கலங்கவில்லை...

கணவன் கஷ்டப்படுத்திய போதும் "குணவதிபாய்" மனம் கலங்கவில்லை...

இரு கைகளையும் வெட்டிய நிலையிலும் "சாருகாதாஸர்" மனம் கலங்கவில்லை...

கை, கால்களை வெட்டிப் பாழுங்கிணற்றில் தள்ளியபோதும் "ஜயதேவர்" மனம் கலங்கவில்லை...

மஹா பாபியினிடத்தில் வேலை செய்தபோதும் "சஞ்சயன்" மனம் கலங்கவில்லை...

பெற்ற பிள்ளையை பறிகொடுத்த போதும் "பூந்தானம்" மனம் கலங்கவில்லை...

கூடப்பிறந்த சகோதரனே படாதபாடு படுத்தியபோதும் "தியாகராஜர்" மனம் கலங்கவில்லை...

நரசிம்மர் சன்னதியில் விஷ தீர்த்தம் தந்தபோதும் "மஹாராஜா ஸ்வாதித் திருநாள்" மனம் கலங்கவில்லை...

சோழராஜனின் சபையில் கண்ணை இழந்த பின்பும் "கூரத்தாழ்வான்" மனம் கலங்கவில்லை...

எப்படி முடிந்தது இவர்களால்..? . தங்களோடு இறைவன் எப்பொழுதும் இருக்கின்றான் என்று உணர்ந்ததால் தான் இது சாத்தியமாயிற்று. கடவுள் எப்பொழுதும் கூடவே இருக்கிறான் என்று உணர ஒரே வழி, ஆழ்ந்த நம்பிக்கை தான். அந்த நம்பிக்கை ஏற்பட வழி..? முதல் வழி சொல்லறிவு.

அறிஞர்கள், ஞானிகள் மற்றும் சான்றோர்களின் கூற்றை மனப்பூர்வமாக ஏற்று கொள்ளுதல் தான் சொல்லறிவு என்பது.

இரண்டாம் வழி, சுய அறிவு. மன அமைதியுடன், நடுநிலை உணர்வுடன், ஆழ்ந்த சிந்தனையில் புத்தி பலவகைகளில் ஆய்வு செய்து, உண்மை விளங்கும்போது மனம் தெளிவடைந்து... அப்போது ஏற்படுவது தான் சுயஅறிவு.

என்ன நடத்தாலும், எதை இழந்தாலும், ஆத்ம திருப்தியுடன் செய்யும் செயல்களே, ஆத்ம பலத்தை தரும். அந்த ஆத்ம பலமே, எதையும் தாங்கும் சக்தியை நமக்குத் தரும்..

இறைவனை வழிபடுவோம். அன்பே கடவுள் என போற்றுவோம். உறுதியுடன் உண்மையாக இருப்போம். மனஅமைதியும், அர்த்தமுள்ள வாழ்க்கையையும் பெற்றிடுவோம்.

●







# வடஅமெரிக்கத் தமிழ்ச் சங்க பேரவையின் பெருவிழா FETNA - 2018

**வட அமெரிக்காவின் 50 தமிழ்ச்சங்கங்களின் கூட்டமைப்பான, வட அமெரிக்கத் தமிழ்ச் சங்க பேரவையின் 31ம் ஆண்டு மாநாடு, டெக்ஸாஸ் மாகாணத்தில் பிரிஸ்கோ நகரில் நடக்க இருக்கிறது. இந்த மாநாட்டை, வட அமெரிக்கத் தமிழ்சங்க பேரவையோடு மெட்ரோப்ளெக்ஸ் தமிழ் சங்கம் இணைந்து நடத்துகிறது.**

டாக்டர் பெப்பர் அரங்கத்தில் ஜூன் மாதம் 29, 30, மற்றும் ஜூலை மாதம் முதல் தேதி வரை நடக்க இருக்கும் இந்த மாநாட்டுக்கான ஏற்பாடுகள் சிறப்பாக நடந்து வருகின்றன.

“மரபு, மழலை, மகளிர்” என்பதே இந்த மாநாட்டின் கருப்பொருளாகும். உலகின் தொன்மையான மொழிகளில் ஒன்றானதும், சிங்கப்பூர், மலேசியா, இலங்கை, கனடா, மொரிஷியஸ் போன்ற நாடுகளின் அங்கீகரிக்கப்பட்ட இந்திய மொழிகளில் முதன்மையானதுமான தமிழ் மொழியின் உலகத் தரத்தை மென்மேலும் உயர்த்தும் முயற்சியாக ஹார்வர்ட் பல்கலைக்கழகத்தில் தமிழுக்கெனத் தனி இருக்கை அமைக்க ஆறு மில்லியன் டாலர்கள் நிதி திரட்டும் அளப்பரிய பணி உலகத் தமிழ் ஆர்வலர்களால் மேற்கொள்ளப்பட்டது.

### தஞ்சைப் பெரிய கோயில்

**பேரவை விழாவுக்காக, தஞ்சை பெரிய கோவிலைப் போன்ற வடிவமைப்பு, 3 அடி உயரத்தில் செயற்கையாக உருவாக்கப்பட்டு வருகிறது. இதற்காக 200 தன்னார்வ தொண்டர்களும், கலைஞர்களும் 4 மாதமாக உழைத்து வருகின்றனர்.**

**பேரவையின் விழாவுக்கு பிறகு, இந்த தஞ்சைப் பெரிய கோயிலின் மாதிரி, ஹூஸ்டனில் உள்ள மியூசியத்தில் வைப்பதற்கான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன.**

உலகத்தமிழ் தன்னார்வலர்கள் விடாமுயற்சியின் பலனாகவும், எண்ணற்ற தமிழ்க்கொடையாளர்களின் பங்களிப்பாலும் ஹார்வர்ட் பல்கலைக்கழகத்தில் தமிழ் இருக்கை அமைத்தலை, இந்த மாநாட்டில் மைய நிகழ்ச்சியாகக் கொண்டாடுகிறது.

பேரவை மாநாட்டின் முதல் நாளான ஜூன் 29ம் தேதி அன்று, மருத்துவம், மேலாண்மை, கல்வி, தொழில்நுட்பம், சமூகப்பணி என பல்வேறு துறைகளில் சாதித்த தமிழ் தொழில் முனைவோர்கள் ஒன்றாக ஓரிடத்தில் சங்கமிக்கும் நிகழ்வாகத் தமிழ் தொழில் முனைவோர் கருத்தரங்கம் (TEF) நடக்க இருக்கிறது.

இதில், வி.ஐ.டி. பல்கலைக்கழகத்தின் வேந்தர் விஸ்வநாதன், LMES அகாடமி நிறுவனர் பிரேமானந் சேதுராஜ், டெக் மஹிந்திரா தலைமையதிகாரி சிதம்பரம் லட்சுமணன், ஐ.நாவின் மகளிர் தொழில்முனைவோர் தின உலகத்தூதர் மது சரண், இன்ஸ்டாபேஜ் நிறுவனத்தின் துணைத் தலைமையதிகாரி சரண்யா பாபு, BNSF தலைமை தகவலதிகாரி முரு முருகப்பன், தலைமை நிர்வாக அதிகாரி காஞ்சனா ராமன், LifeHelp அறக்கட்டளை நிறுவனர் பிளேஸ் கண்ணன், வேல்ஸ் பல்கலைக்கழகத்தின் நிறுவனர் ஐசரி கே கணேஷ், Triveni Earth Movers நிர்வாக இயக்குனர் கார்த்திகேயன் பாலசுப்பிரமணியம், Signal Corpse ரெகார்டிங் நிறுவனர் அருண் பாண்டியன் உட்பட மற்றும் 20க்கும் மேற்பட்ட தொழில்முனை சாதனையாளர்கள் ஐந்து தலைப்புகளில் பேச இருக்கிறார்கள்.

கருத்தரங்கின் ஓர் அங்கமாக வளரும் தொழில் முனைவோரின் ஆர்வத்தினை அடுத்த கட்டத்திற்கு எடுத்து செல்லும் ‘இளம் தொழில் முனைவோர்’ (TEF Junior) நிகழ்ச்சியும் நடைபெற இருக்கிறது. இதனைத் தொடர்ந்து மாலையில் கொடையாளர்கள் மற்றும்



விழாவில், தமிழிசை ஆய்வாளர் என். மம்மது, எழுத்தாளர் சு. வெங்கடேசன், தமிழிசை பாடகர் சஞ்சய் சுப்பிரமணியன், தமிழ் சொற்பொழிவாளர் கலியமூர்த்தி, பாடாலாசிரியர் அறிவுமதி, கவிஞர் ஈரோடு தமிழன்பன், வழக்கறிஞர் அருள்மொழி, பேராசிரியர் கு. ஞானசம்பந்தன், நடிகர், இசையமைப்பாளர் ஜி.வி. பிரகாஷ், நாட்டிய கலைஞர் நர்த்தகி நடராஜ், ஓவியர் டிராட்ஸ்கி மருது, ஓவியர் இளையராஜா ஆகியோர் சிறப்பு விருந்தினர்களாக கலந்து கொள்கின்றனர்.

சிறப்பு விருந்தினர் பங்குபெறும் மாபெரும் சிறப்பு விருந்தோம்பல் நிகழ்வு நடக்க இருக்கிறது.

ஜூன் 29 மற்றும் ஜூலை ஒன்றாம் தேதியில் பேரவையின் கருப்பொருளுக்கு மேலும் அழகு சேர்க்கும் வண்ணம் பல்வேறு மரபு சார் நிகழ்ச்சிகள், பண்ணிசை நிகழ்ச்சிகள் , தமிழ் இலக்கிய நிகழ்ச்சிகள், குழந்தைகள் மற்றும் பதின் பருவத்தினர் பங்குபெறும் இலக்கிய, தனித்திறன் நிகழ்ச்சிகள், குறும்பட போட்டிகள் நடைபெற உள்ளன.

மேலும், இந்நிகழ்ச்சிகளின் முத்தாய்ப்பாக அமெரிக்காவில் பல்வேறு துறைகளில் சாதித்த தமிழ் சாதனையாளர்களை அங்கீகரிக்கும் தமிழ் முன்னோடி விருது வழங்கும் விழா நடைபெற உள்ளது. இதனைத் தொடர்ந்து, தமிழ் மரபின் மாண்பினை உரக்கச் சொல்லும் விதமாக மெட்ரோப்ளெக்ஸ் தமிழ்ப்பள்ளிகளின் அனைத்து மாணவ மாணவியரும் பங்குகொள்ளும் கண் கவர் அணிவகுப்பு திட்டமிடப்பட்டுள்ளது.

ஒரு மில்லியன் அமெரிக்க டாலர்கள் செலவில் அரங்கேறும் இந்த மாபெரும் பேரவை திருவிழாவில், கொடையாளர்களின் பங்களிப்பும், விளம்பரதாரர்களின் பங்களிப்பும் குறிப்பிடத்தக்கதாக அமையும் என்பதை எடுத்துரைத்த பேரவையின் ஒருங்கிணைப்பாளரான கால்டுவெள் வேல்நம்பி, "வணிகம், சந்தை மற்றும் தொழில் சார்ந்த வளர்ச்சிகளுக்கு தமிழ் அமெரிக்க சமூகம் பெருமளவில் பங்குபெறும் இந்த பேரவை மாநாடு பெரும் பங்காற்றும்" என்பதையும் குறிப்பிடுகிறார்.

அமெரிக்க வாழ்த்தமிழ்ச் சமூகத்தைப் பெருமைப்படுத்தும் விதமாகக் கடந்த ஜனவரி மாதத்தைத் தமிழ் மரபு மாதமாக அதிகாரப்பூர்வமாக அறிவித்தது மட்டுமின்றி , பிரிஸ்கோ கல்வி மண்டலத்தின் அங்கீகரிக்கப்பட்ட இதர மொழித்திறன் மதிப்பீடுகளில் தமிழையும் இணைத்த பிரிஸ்கோ நகரின் பொருளாதாரத்தை, மேலும் ஊக்குவிக்கும் வண்ணம் 6,500 பேர் பங்கு கொள்ள இருக்கும் இந்த மாபெரும் மாநாட்டில் வெளி மாகாணங்களில் இருந்து மட்டும் ஏராளமான தமிழ் மக்கள் பங்கேற்பார்கள் என எதிர்ப்பார்க்கப்படுகிறது.

மேலும், பேரவை தொடர்பான விவரங்கள் மற்றும் செய்திகள் அனைவரையும் எளிதில் சென்றடையும் வண்ணம் , பிரத்தியேகமாக வடிவைக்கப்பட்ட அதிகாரப்பூர்வ பேரவை இணையதளத்தில் வெளியிடப்பட்டுள்ளது.

www.fetnaconvention.org

http://www.fetnaconvention.org

மேலும் விவரங்களுக்கு coordinator2018@fetna.org என்ற மின்னஞ்சல் முகவரியில் தொடர்பு கொள்ளவும்.

பேரவை குறித்த செய்திகளை http://www.fetnaconvention.org இணையத்தளத்தில் பார்க்கலாம்.

**பேரவை விழாவுக்காக, ஏ.ஆர். ரகுமானின் சகோதரி ஏ.ஆர். ரஹானா இசையமைத்த பாடல், மிகவும் பிரபலமாகி இருக்கிறது.**

**"ழ சொல்லு தமிழா" என்று தொடங்கும் இந்தப் பாடலை, இதுவரை 6 லட்சத்துக்கும் மேற்பட்டவர்கள் கேட்டிருக்கிறார்கள். தினமும் ஏராளமானவர்கள் கேட்டபடி இருக்கின்றனர்.**








# வளைகுடா பகுதி தமிழ் மன்றத்தின் தமிழ்ப் புத்தாண்டு விழா

■ ரமேஷ் குப்புசாமி

**வளைகுடா பகுதி தமிழர்களின் சார்பில், தமிழ் புத்தாண்டு திருவிழா, சித்திரை மாதம் 8ஆம் தேதி (ஏப்ரல் 21, 2018) சனிக்கிழமை அன்று Gale Ranch Middle School-ல் பெரும் உற்சாகத்துடனும் விமரிசையாகவும் கொண்டாடப்பட்டது. தமிழன்னையைப் போற்றிய வாழ்த்துப் பாடலுடன், விழா தொடங்கியது.**

விழாவின் முதல் நிகழ்ச்சியாக அமைந்த, வளைகுடாப் பகுதியின் இளம் மழலைகளின் இசை நிகழ்ச்சி, அரங்கத்தையே நனைத்தது. மேலும், 8அடி உயர ஆலமரம், கரகம் ஆடும் பெண்மணி, தவில் வாசிக்கும் ஆண் மற்றும் பல வண்ணத்துணிகளின் உதவியுடன் அமைத்த மேடை அலங்காரம் அனைவரையும் ஆச்சர்யப்படுத்தியது.

மகளிர் குழுவினர், நன்கு செழித்து வளர்ந்த முளைப்பாரியுடன் அணிவகுத்து, விவசாயிகளுக்கு நன்றி கூறினர். அடுத்து, குழந்தைகள் பங்கேற்ற மாறுவேட அணிவகுப்பு போட்டி, காண்போரின் உள்ளங்களை கொள்ளை கொண்டது.

விழாவின் முக்கிய நிகழ்வாக, சான் ரமோன் நகரச்சபைத் தலைவர், பில் கிளார்க்சன் (Bill Clarkson, Mayor, San Ramon, CA) கலந்து கொண்டு சிறப்புரை ஆற்றினார். அதனைத் தொடர்ந்து, மற்றுமொரு சிறப்பு விருந்தினராக, டப்ளின் நகரச்சபை உறுப்பினர் அருண் கோயல் (Arun Goel) கலந்து கொண்டு கலை நிகழ்ச்சிகளை வாழ்த்தி பேசினார்.

பிறகு, தமிழ் மன்றத்தின் புதிய குறியத்தினை (logo) பார்வையாளர்களுக்கு அறிமுகப்படுத்தினார்கள். மேலும் தமிழ்மன்றத்தின் தலைவர் தயானந்தன் முன்னிலையில், தமிழ் மன்றத்தின் புதிய இணையதளம் அறிமுகப்படுத்தப்பட்டது.

விழாவின் முத்தாய்ப்பாக, பழம்பெரும் தமிழ் இசைக்கருவிகள் சிலவற்றை காண்பித்து, சில குறிப்புகளையும் கூறி, மேடையிலேயே இசைத்தது அனைவரையும் மெய்சிலிர்க்க வைத்தது.

மேலும், தமிழர்களின் இசைக்கருவிகளான பறை மற்றும் தாரை வாத்தியங்களின் இசையுடன் அழகான பாடலினையும் இசைத்து பார்வையாளர்களை பரவசப்படுத்தினர்.

வளைகுடாப் பகுதி குழந்தைகள் பங்கேற்ற அழகான மற்றும் நேர்த்தியான கிராமிய நடனங்களும், பின்னர் கோலாட்ட நடனங்களும், தம்பதிகள் பங்கேற்ற புதுமையான விளையாட்டுப் போட்டிகளும், பெரியவர்கள் அசத்திய நடன நிகழ்ச்சிகளும், பார்வையாளர்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தின.

மேலும், குழந்தைகள் நிகழ்த்திய, என்றென்றும் நம் நெஞ்சத்தில் குடியிருக்கும் கொடிகாத்த திருப்பூர் குமரன் நாடகம், மிகுந்த பாராட்டுகளைப் பெற்றது. அதனைத் தொடர்ந்து நடந்த ஓவியக் கண்காட்சி அனைவரையும் ஈர்த்தது.

தமிழ் புத்தாண்டு 2018 விழாவின் கடைசி நிகழ்ச்சியாக சிறார்கள் மற்றும் பெரியவர்கள் பங்கேற்ற தற்காலத்திற்கு ஏற்ற இரு தலைப்புகளில் விவாதித்த "தமிழ் மன்றத்தின் நீயா நானா" நிகழ்ச்சி நடைபெற்றது.

தமிழ் புத்தாண்டு விழாவிற்கு வருகை புரிந்து சிறப்பித்த சான்ஃபிரான்சிஸ்கோ வளைகுடாப் பகுதி தமிழ்மக்கள் அனைவருக்கும் தமிழ் மன்றம் சார்பாக, தமிழ் மன்ற நிர்வாகிகள், தயானந்தன் வெங்கடாச்சலம் (தலைவர்), ரமேஷ்சத்தியம் (துணைத்தலைவர்-நிர்வாகம்), குமார் நல்லுசாமி (துணைத்தலைவர்-கலாச்சாரம்), ரமேஷ் குப்புசாமி (செயலாளர்), சங்கர் நடராஜன் (பொருளாளர்), கார்த்திகேயன் பெருமாள் (ஒருங்கிணைப்பாளர்) மற்றும் குணசேகரன் பதக்கம் (கௌரவ உறுப்பினர்) அனைவரும் நன்றி தெரிவித்தனர்.

மேலும் தமிழ் புத்தாண்டு விழாவினை சிறப்பாக நடத்த உதவிய தன்னார்வலர்கள் அனைவருக்கும் தமிழ் மன்ற நிர்வாகிகள் 2018 சார்பாக நன்றி தெரிவிக்கப்பட்டது இரவு 10 மணி அளவில் தமிழ்ப் புத்தாண்டு விழா 2018 இனிதே நிறைவு பெற்றது.





# தமிழ் புத்தாண்டை பக்தி பாடல்களுடன் வரவேற்ற அட்லாண்டா தமிழர்கள்

■ மாதவி குணசேகரன்

**தமிழ்ப் புத்தாண்டைத் தமிழோடு கொண்டாடினர் அட்லாண்டா தமிழர்கள். இறையுணர்வும் தமிழுணர்வும் மிகுந்த அன்பர்கள் கூட்டம் சுமார் ஆறு மணி நேரங்களுக்குப் பழந்தமிழ்ப் பண்களைப் பாடிப் புத்தாண்டை வரவேற்றனர்.**

திருக்குறள், ஆத்திசூடி, திருப்புகழ், தேவாரம், திருவாசகம், நாலாயிர திவ்வியப் பிரபந்தம், திருமந்திரம், திருப்பல்லாண்டு, குமரகுருபரரின் சகலகலா வல்லிமாலை, மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ் முதலான நூல்களில் இருந்து பாடினர். கூட்டாக வழிபடத்தக்க வகையில் பாடல்கள் இனிமையாகப் பண்ணமைக்கப்பட்டிருந்தன.

ஒவ்வொரு பாடலை தொடங்குவதற்கு முன்பும், அந்தப் பாடல்களைப் பற்றியும், பாடலாசிரியர்களைப் பற்றியும், இன்றும் வழக்கத்திலிருக்கும் கோயில் வரலாற்றோடு தொகுத்தும் குறிப்புகளைக் கொடுத்தனர்.

இக்குழு வழிபாட்டைத் பூங்கோதை இராம்மோகன், இராம்மோகன் கிருஷ்ணன் தம்பதியர் வழிநடத்த, கண்ணப்பன் சேக்கப்பன், நிர்மலா ஜெயச்சந்திரன், அபயநாதன் ராதாகிருஷ்ணன், கிருஷ்ணா ராமச்சந்திரன் ஒருங்கிணைத்தனர்.

பெரியண்ணன் சந்திரசேகரன், அருண் சந்தானம், ஹரிஹரன் சாம்பசிவம், மங்களா ஐயர், பைரவி சந்திரமௌலி, பூங்கோதை இராம்மோகன் ஆகியோர் இப்பாடல்களைத் சேர்ந்து தொகுத்தனர்.

முக்கனியோடு அணிவகுத்த அறுசுவை உணவும், தேநீரும் வயிற்றுக்கு ஈயப்பட, செவிக்கு மட்டுமல்லாமல் இம்மைக்கும் மறுமைக்குமான வழிபாட்டால் இந்நிகழ்ச்சி, தமிழ்ப் புத்தாண்டின் நல்லதொரு தொடக்கமாகியது.

“வான்முகில் வழாது பெய்க” என்று தொடங்கி, இறுதியாக “அறம் நனி சிறக்க! அல்லவை கெடுக! அரசுமுறை செய்க! களவு இல்லாகுக! நன்று நனிசிறக்க! தீது இல்லாகுக! மாரி வாய்க்க! வளம் நனிசிறக்க!” என்ற ஓரம்போகியார் வாழ்த்தோடு நம் நாடு சிறக்கவும் மழை பெருகவும் அனைவரும் வேண்டி வழிபாடு முடிந்த இரவில், வானமும் மாரியை நனி நல்கியது!

விழாவில் பாடப்பட்ட பாடல்களை இந்த லிங்க் மூலம் காணலாம். http://tinyurl.com/maraikal .



# ஹூஸ்டனில் கம்பர் விழா

**மே மாதம் 20 ஆம் தேதி மீனாட்சி திருக்கோவிலில் “கம்பர் கண்ட இராமன்” என்ற தலைப்பில் வரதராஜன் சிறப்பு உரை ஆற்றினார்.**

பாரதி கலை மன்ற தலைவர் மணி வைத்தீஸ்வரர் அனைவரையும் வரவேற்று பேசினார். கம்பர் பிறந்த தேரழுந்தூர் அவருடைய சொந்த ஊர் என குறிப்பிட்டார். வரதராஜன் தான் எழுதிய புத்தகத்தை மீனாட்சி கோவில் தலைவர் பத்மினி ரங்கநாதனிடம் வழங்கினார். நா.கணேசன் தமிழ் புலவர்களின் சிறப்பை கூறினார். சாம் கண்ணப்பன் தன் ஊரான நாட்டரசன் கோட்டையில் கம்பர் காலமானது பற்றி கூறினார்.

ராமன் இராமாயணத்தில் மூன்று தருணங்களில் தலைமை பொறுப்பை நிறைவேற்றியது பற்றி வரதராஜன் பேசினார். அவருடைய பேச்சு மிகவும் சுவையாகவும், அதே சமயம் நுட்பமாகவும் அமைந்தது. இவர் காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத்தில் படித்து இப்பொழுது சிங்கப்பூரில் வசித்து வருகிறார்.

# EB-5 OPPORTUNITY

WWW.ARELLAJONES.COM



- Low Administrative Fees
- 35+ years Developer Experience
- Guaranteed project start date, no waiting for additional investors

A DEVELOPMENT BY:

Chowdary Yalamanchili of




REGIONAL CENTER BY:




# HOUSTON, TEXAS

SENIOR 55+ INDEPENDENT LIVING

# கிராண்ட் கல்லறை

ஹரி

**நியூயார்க் ஓவியக் காட்சியகத்தில் இருந்து ஒரேயொரு ஓவியத்தைத் திருட முடியுமா என்று சவால் விட்ட ரிச்சர்டுக்குப் பதிலடியாக, ஒரேயொரு ஓவியத்தையல்ல, அந்த ஓவியக் காட்சியகத்தையே தன்னால் விற்க முடியும் என்று நிரூபித்துக் காட்டிய பார்க்கர், கடைசியாகப் பெருந்தொகை ஒன்றைப் பார்த்துவிட்டுத் தொழிலிலிருந்து விலகிக்கொள்ள ஆசைப்பட்டான். அதற்கு அவன் தேர்ந்தெடுத்ததுதான் யுலீசிஸ் கிராண்ட் கல்லறை.**

நியூயார்க்கின் அடையாளங்களில் ஒன்று, யுலிசீஸ் கிராண்ட் தேசிய நினைவு மண்டபம். சுருங்கச் சொன்னால் கிராண்ட் கல்லறை.

சுதந்திரதேவி சிலை, புரூக்ளின் பாலம், அசல் மேடிசன் கார்டன் சதுக்கம், ஓவியக் காட்சியகம் போன்றவை எப்படி நியூயார்க்கில் முக்கியத்துவம் வாய்ந்தவையோ, அவற்றுக்கு ஒரு குண்டுமணி கூடக் குறையாத தகுதியை பெற்றது கிராண்ட் கல்லறை.

**யுலிசீஸ் கிராண்ட்**

அமெரிக்க மக்கள் எல்லோராலும் விரும்பப்படுபவர், ஒன்றுபட்ட அமெரிக்கா உருவாக பாடுபட்ட முக்கியமானவர்களில் ஒருவர். அமெரிக்காவிலுள்ள சில மாகாணங்கள் தங்களைத் தனி நாடுகளாக அறிவித்துப் பிரிந்து சென்றபோது, இவர் தலைமையில் சென்ற அரசு படைகள், அந்த மாகாணங்களைப் போரில் வென்று, அமெரிக்காவுடன் இணைத்தன.

அமெரிக்காவின் ராணுவ ஜெனரலாக இருந்த இவர், பதவியிலிருந்து ஓய்வுபெற்ற பின், ஜனாதிபதி பதவிக்குப் போட்டியிட்டு, அமெரிக்காவின் 18ஆவது ஜனாதிபதியாக ஆனார். இவர் தொண்டைப் புற்றுநோயால் பாதிக்கப்பட்டு, 1885ஆம் ஆண்டு ஜூலை 23ல் இறந்தார். அவர் நினைவாக கட்டப்பட்டதுதான் இந்தக் கல்லறை.

கிராண்ட் கல்லறையைப் பற்றிய குறிப்பைப் படித்துக் கொண்டே, அந்த வளாகத்தினுள் நுழைந்தார் அந்த ஐரோப்பியர். கொஞ்ச நேரம் கழித்துக் கைக்கடிகாரத்தைப் பார்த்தவர் பரபரத்தார்.

''ஐயோ நேரமாகிவிட்டதே!... கர்னல் பீட்டரை வரச்சொல்லியிருந்தோமே...'' என்று தனக்குள் சொல்லிக் கொண்டே தான் தங்கியிருந்த சொகுசு ஓட்டலுக்குத் திரும்பினார்.

வரவேற்பறையில் கர்னல் பீட்டரும் அவருடன் ஓர் இளம்பெண்ணும் காத்திருந்தனர். தன்னைப் பார்த்தவுடன் எழுந்த அவர்களை அழைத்துக்கொண்டு, தன் அறைக்குச் சென்றார்.

''சொல்லுங்க சார்... எதுக்கு என்னை வரச் சொன்னீங்க?...'' கர்னல் பீட்டர் கேட்டார்.

அந்த ஐரோப்பியரும் கர்னல் பீட்டரும் ரொம்ப நாள் பழக்கமெல்லாம் இல்லை. எல்லீஸ் தீவு வழியாக நியூயார்க் வரும்போது கப்பலில் தான் அறிமுகம். பார்த்தவுடன் இருவருக்குமே பிடித்து விட்டது.

கொஞ்சம் பழகியவுடன் ஓரளவுக்கு நெருக்கமாகி விட்டார்கள்.

''கர்னல்... நானும் நியூயார்க்கிலேயே செட்டிலாகலாம்ன்னு நினைக்கிறேன்... கப்பலில் வரும்போது நீங்கள் உங்களுக்குத் தெரிந்த பிசினஸ்மேன்களை அறிமுகப்படுத்துவதாகச் சொன்னீர்கள்... அவர்களிடம் கேட்டு ஏதாவது நல்ல பிசினஸ் இருந்தால் சொல்லுங்கள்...''

''கவலையை விடுங்கள்... நியூயார்க்கில் பாதி பிசினஸ்மேன்கள் எனக்கு நண்பர்கள் தான்... அவர்களிடம் உங்களை அறிமுகப்படுத்தி வைக்கிறேன்... நல்ல நல்ல ஐடியாக்களைத் தருவார்கள்...''

தனது பேச்சைக் கேட்பதைப்போலத் தெரிந்தாலும் முன்னழகு தெரியக் கவர்ச்சியாக உட்கார்ந்திருந்த அந்த இளம்பெண் மீதே ஐரோப்பியரின் கவனம் முழுதும் இருந்ததைப் பார்த்த கர்னல் பீட்டர், ''ஐயாம் சாரி... இந்தப் பெண்ணை அறிமுகப்படுத்த மறந்து விட்டேன்... இவள் என் சிநேகிதர் அலெக்ஸ் கிராண்ட்டின் மகள் லாரா கிராண்ட்...

அலெக்ஸ் கிராண்ட், சாதாரண ஆள் இல்லை... அமெரிக்காவின் முன்னாள் ஜனாதிபதி யுலிசீஸ் கிராண்ட்டின் பேரன்... வாழ்ந்து கெட்ட குடும்பம்... சில கூடா நட்பால் எல்லாச் சொத்தும் போய்விட்டது... இப்போது மிஞ்சியிருப்பது கிராண்ட் கல்லறை மட்டும்தான்...'' என்றார்.

இவ்வளவு சொன்ன பிறகும், ஐரோப்பியரின் கண்கள், லாராவையே மொய்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்த கர்னல் பீட்டர், ''ஓகே... பட்சி விழுந்து விட்டது...'' என்ற மகிழ்ச்சியில் அங்கிருந்து லாராவுடன் கிளம்பினார்.

** ** **

இரண்டு நாட்களுக்குப் பிறகு கடைத்தெருவில் காலாற நடந்துகொண்டிருந்தார் அந்த ஐரோப்பியர். அப்போது தனது தோளை யாரோ தட்டுவதை அறிந்து திரும்பிப் பார்த்தால் லாரா. அடுத்த கனம் ஐரோப்பியரின் மனம், அவரின் வயதை விட அதிகமாகத் துள்ளியது.

''ஹலோ சார்... என்ன இந்தப் பக்கம்?... எப்படி இருக்கீங்க?...''

''சும்மா சுத்திப் பார்க்கலாம்ன்னு வந்தேன்...''

''வாங்க... என் வீடு பக்கத்தில் தான் இருக்கிறது... ஒரு கப் காபி சாப்பிட்டுட்டு வரலாம்... என் அப்பாவையும் உங்களுக்கு அறிமுகப்படுத்தி வைக்கிறேன்...'' என்றாள் லாரா.

லாராவின் பேச்சுக்கு மறுபேச்சே இல்லாமல் அவளுடன் சென்றார்




அவர். அந்தக் காட்சியைப் பார்த்தால், பூசாரியின் பின்னால் பலியாடு போவதைப்போல இருந்தது.

அங்கிருந்து பத்து நிமிட நடை தூரத்திலேயே இருந்தது லாராவின் வீடு. நட்டநடு ஹாலில் கம்பீரமாக அமர்ந்திருந்தார் கர்னல் அலெக்ஸ் கிராண்ட். கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்களே என்பதற்கு உதாரணமாக இருந்தார் அவர். முகத்திலேயே ராணுவத்தனம் இருந்தது. உடலை விறைப்பாக வைத்திருந்தார். அவருக்கருகில் இருந்த நாற்காலியில் கர்னல் பீட்டர் உட்கார்ந்திருந்தார்.

ஹால் சுவரில் கிராண்ட் கல்லறையின் பிரமாண்ட ஓவியம் மாட்டப்பட்டிருந்தது. அடுத்தடுத்த சுவர்களில் யுலிசீஸ் கிராண்ட்டின் முழு உருவப் படம், அவர் தன் குடும்பத்தினருடன் இருப்பதைப் போன்ற ஓவியங்கள் மாட்டப்பட்டிருந்தன. ராணுவ உடையில் கர்னல் அலெக்சின் ஓவியமும் மாட்டப்பட்டிருந்தது.

பரஸ்பரம் அறிமுகம் முடிந்ததும், கர்னல் அலெக்ஸ் தன் பேச்சை ஆரம்பித்தார்.

''சார்... நீங்க ஏதாவது பிசினஸ் இருந்தா சொல்லச் சொன்னதா பீட்டர் சொன்னார்... இப்ப, எனக்கு ஒரு ஐடியா தோணுது... உங்களுக்கு சரின்னு பட்டால் செய்யுங்க...

இந்த நகர வாழ்க்கை அலுத்து விட்டது... என் கடைசிக் காலத்தை ஏதாவதொரு தீவுல கழிக்கலாம்ன்னு நினைக்கிறேன்... அதுக்குப் பணம் வேணும்... அதுமட்டுமில்லாம எனக்குக் கொஞ்சம் கடன் இருக்கு... அதையும் அடைக்கணும்...

என் தாத்தாவின் கல்லறையான யுலிசீஸ் கிராண்ட் கல்லறையை



யாருக்காவது விக்கலாம்ன்னு பார்க்குறேன்... அதை ஏன் நீங்க வாங்கக்கூடாது?... இந்த விஷயம் வெளியே தெரிஞ்சா எனக்குத் தர்ம சங்கடம்... காதும் காதும் வச்சது மாதிரி டீலை முடிக்கணும்ன்னு நினைக்கிறேன்... என்ன சொல்றீங்க?...''

அந்த ஐரோப்பியருக்கும் அது சரியெனப்பட்டது. தன்னுடன் உரசியபடி உட்கார்ந்திருந்த லாராவைப் பார்த்தார். அந்தக் கண்களில் இருந்த கவர்ச்சி, அவரை வேறு எதையுமே யோசிக்கவிடவில்லை. உடனடியாக விலை பேசப்பட்டது. கர்னல் பீட்டர் இருவருக்கும் பொதுவாக இருந்து அந்த டீலை முடித்து வைத்தார்.

மறுநாள், கனமான இரும்பு பீரோவிலிருந்த கிராண்ட் கல்லறை சம்பந்தப்பட்ட அத்தனை டாக்குமென்ட்டுகளையும், எடுத்து வைத்தார் கர்னல் அலெக்ஸ். அவற்றைக் கர்னல் பீட்டரும், அந்த ஐரோப்பியரும் பார்த்தனர். எல்லாமே அரசு முத்திரைகளுடன் இருந்தன. உடனடியாக ஆவணங்களும், பணமும் கைமாறின. ஆவணங்கள் கைமாறியபோது, கர்னல் அலெக்சும், லாராவும் கண்கலங்கினர்.

கொஞ்ச நேரத்தில் தன்னை ஆசுவாசப்படுத்திக்கொண்ட கர்னல் அலெக்ஸ், ''சார்... நாளைக்கு ஒரு விருந்துக்கு ஏற்பாடு செய்திருக்கேன்... இந்த நகரத்துல இருக்குற அத்தனை பெரிய மனிதர்களையும் அழைச்சிருக்கேன்... நீங்களும் வாங்க... முறைப்படி எல்லாருக்கும் உங்களை அறிமுகப்படுத்தி வைக்கிறேன்...'' என்றார்.

ஆவணங்களை எடுத்துக்கொண்டு சந்தோஷத்துடன் தான் தங்கியிருந்த ஓட்டலுக்குத் திரும்பினார் ஐரோப்பியர். மறுநாள் மாலை தோரணையுடன், அலெக்சின் பங்களாவுக்குச் சென்றார். ஆனால், பங்களாவுக்குள் நுழைந்தவருக்குப் பயங்கர ஷாக். மொத்த வீடும் காலியாக இருந்தது. உலகமே சுழல்வது போலிருந்தது அவருக்கு. அடுத்த நிமிடம் போலீஸ் ஸ்டேஷனுக்கு ஓடினார்.

** ** **

அதே நேரத்தில் நகரத்தின் மற்றோர் ஒதுக்குப்புறமான இடத்தில், கர்னல் அலெக்ஸ், பீட்டர், லாரா ஆகியோர் ஒன்றாக உட்கார்ந்து சிரித்துக்கொண்டிருந்தனர்.

கர்னல் அலெக்ஸ் கிராண்ட் என்ற பெயரில் கடைசிக் காட்சியில் தான் பார்க்கர் வந்தாலும், இந்தக் கல்லறையை விற்கும் ஆபரேஷனுக்குக் கதை, திரைக்கதை, வசனம், இயக்கம் என எல்லாமே அவன் தான். லாரா என்ற போலிப் பெயரில் ஒளிந்திருந்த பெண்ணுக்கும், கர்னல் பீட்டருக்கும் சேர வேண்டிய பணத்தைக் கொடுத்து விட்டு அந்த ஊரை விட்டு மூட்டையைக் கட்டினான் பார்க்கர்.

இதுதான் கடைசி; இனிமேல் எதுவும் வேண்டாம்; அமைதியான வாழ்க்கை வாழலாம் என்று தான் பார்க்கர் நினைத்தான். ஆனால், ஆடிய காலும் பாடிய வாயும் சும்மா இருக்காது என்று சொல்வார்கள்.

அது பார்க்கர் விஷயத்தில் உண்மையாகிப் போனது.

## மேடிசன் கார்டன் சதுக்கம்

கிராண்ட் கல்லறையை விற்றபோது, 'இதுதான் கடைசி' என்று பார்க்கர் நினைத்தான். நினைத்ததோடு சரி. அவனால் அத்துடன் நிறுத்திக் கொள்ள முடியவில்லை. இந்த முறை அவனை ஈர்த்தது, அசல் மேடிசன் கார்டன் சதுக்கம்.

அசல் மேடிசன் கார்டன் சதுக்கம் என்பது 1890ஆம் ஆண்டு கட்டப்பட்ட, நியூயார்க் நகரிலுள்ள ஒரு பிரபலமான உள்விளையாட்டு அரங்கு. 1902-1903ஆம் ஆண்டுக்கான உலகக்கோப்பைக் கால்பந்தாட்டப் போட்டிகள் இங்குதான் நடந்தன.

அனைத்து வகையான விளையாட்டுப் போட்டிகள், இசை நிகழ்ச்சிகள், சர்க்கஸ், கட்சிகளின் மாநாடு என எல்லா வகையான நிகழ்வுகளும் இங்கு நடக்கும். அந்தக் காலத்தில் மிகவும் புகழ் பெற்ற அரங்கம் இது. இந்த அரங்கத்தைத்தான் விற்கத் திட்டமிட்டான் பார்க்கர்.

** ** **

நியூயார்க்கின் அந்த நட்சத்திர ஓட்டல் அறையில் தங்கியிருந்த குண்டான பெண்மணி, வானத்துக்கும் பூமிக்கும் குதித்துக் கொண்டிருந்தாள். ஓட்டலின் மேனேஜர், அந்தப் பெண்ணைச் சமாதானப்படுத்திக் கொண்டிருந்தார்.

''என் கணவர் ஆசை ஆசையாய் வாங்கிக் கொடுத்தது... குளிக்கப் போவதற்கு முன் இங்கேதான் வைத்திருந்தேன்... திரும்பி வந்து பார்த்தால் நெக்லசைக் காணவில்லை... போலீசைக் கூப்பிடுங்கள்...'' என்று கத்திக்கொண்டிருந்தாள்.

மேனேஜருக்கு என்ன சொல்வதென்று புரியவில்லை. போலீஸ் வந்தால் ஓட்டலின் மானம் போய்விடும். பெரிய மனிதர்கள் தங்கும் ஓட்டல், திருடு நடந்து விட்டது என வெளியே தெரிந்தாலே, பெரிய பிரச்சனைதான்.









# HIGH CURCUMIN TURMERIC POWDER


100% Natural

Healthy

Affordable




## Turmeric / Curcumin helps support



- Working Memory
- Cognitive Performance
- Focus and Attention
- Overall Brain and Cognitive Health



- Heart Health and overall Circulation



- Liver Health



- Joint Health
- Relief for everyday aches and pains



## Curcumin Benefits



The average daily intake of turmeric in India is about 2000mg and 5-10% of that, roughly 125mg is curcumin.



Turmeric is an Ayurvedic remedy used for 4,000 years.



### Curcumin is good for the brain

❖Curcumin increases DHA levels which helps healthy brain.

❖Curcumin is protective against cell death in brain injuries caused by rapid blood return.



### Curcumin fights autoimmunity

❖Curcumin helps in the treatment of inflammatory bowel disease and appears to be safe and effective in maintaining remission in patients with inactive ulcerative colitis.



### Curcumin helps your gut

❖Curcumin stimulates your gallbladder to release bile.

❖Bioavailable curcumin helps with stomach ulcers by inhibiting stomach acid secretion and inhibiting the activity of pepsin.



### More benefits of Curcumin

❖Anti-viral, anti-bacterial, anti-fungal and anti-aging.

❖Supports women's health (PMS, HPV, cervical cancer)

❖Fights cancer (Breast, Colon, Leukemia, Lung, Prostate, Pancreatic, Brain)

❖Protects your kidneys.

❖Helps your eyes (Cataracts, Dry eyes)

❖Helps joint problems.

இதை எப்படிச் சமாளிப்பது என்று தெரியாமல் கையைப் பிசைந்து கொண்டிருந்தார்.

அந்த நேரத்தில் உள்ளே நுழைந்தார் அந்த நடுத்தர வயதுக்காரர். சுத்தமான, விலை உயர்ந்த ஆடைகள். மரியாதைக்குரிய தோற்றம்.

''மேடம்... இந்த நெக்லஸ் உங்களுடையதா பாருங்கள்...''

''ஆமாம்... என்னுடையதுதான்...''

''என் பெயர் பிரின்ஸ் தாமஸ்... நான் பக்கத்து அறையில்தான் தங்கியிருக்கிறேன்... நான் உள்ளே வரும்போது எதிரில் வேகமாக வந்த ஒருவன் என்மீது மோதிவிட்டு ஓடினான்... அவன் பாக்கெட்டில் இருந்து இந்த நெக்லஸ் விழுந்தது... மேனேஜர்கிட்ட கொடுக்கலாம்னு வந்தா, இங்க இந்தப் பிரச்சனை...'' என்று சொல்லி அந்த நெக்லசை அந்தப் பெண்ணிடம் கொடுத்துவிட்டுத் தன் அறைக்குச் சென்றார் அவர். மேனேஜர் நிம்மதியுடன் அங்கிருந்து நகர்ந்தார்.

அன்று முதல் அந்தப் பெண்ணும், தாமசும் நல்ல நண்பர்களாயினர்.

மெக்ஸிகோவைச் சேர்ந்த அந்தப் பெண்ணின் கணவர், சில மாதங்களுக்கு முன் இறந்தார். அந்த ஊரில் இருந்தால் கணவரின் நினைவு வருகிறது என்று நியூயார்க்கில் செட்டிலாக வந்திருந்தாள். அவள் மட்டும் வரவில்லை. அவள் கணவன் சேர்த்து வைத்த பணத்தை, மூட்டையாகக் கட்டி எடுத்து வந்திருந்தாள். ஏதாவது பிசினஸ் செய்யலாம் என, தன் யோசனையைத் தாமசிடம் சொன்னாள்.

''நல்லா செய்யலாமே... எனக்கும் உங்களுக்கும் என்ன பொருத்தம் பாருங்க!... நான் இந்த ஊர்ல இருக்கிற என் சொத்துகளை வித்துட்டு ஜெர்மன்லயே செட்டிலாகலாம்னு இருக்கேன்... என் எல்லாச் சொத்தையும் வித்துட்டேன்... மேடிசன் கார்டன் சதுக்கம் மட்டும் தான் பாக்கி... உங்களுக்கு ஆட்சேபனை இல்லன்னா... அதை வாங்கிக்கோங்களேன்... விளையாட்டுப் போட்டிகள், சர்க்கஸ், மாநாடு எல்லாம் நடப்பதால் நல்ல வாடகை வருகிறது...'' என்றார் தாமஸ்.

அந்த மெக்ஸிகோ பெண்ணும் சம்மதித்தாள். மறுநாள் இருவரும் மேடிசன் கார்டன் சதுக்கத்துக்குச் சென்றனர். அவர்கள் சென்ற கார், போர்டிகோவில் நின்றதுமே காரை விட்டு இறங்க வசதியாக, கோட் சூட் அணிந்த ஒருவர் வந்து பணிவாக கார் கதவைத் திறந்து விட்டார்.



''இவர் தான் இந்தச் சதுக்கத்தின் மேனேஜர்... இந்த அரங்கை உங்களுக்குச் சுற்றிக் காண்பிப்பார்... அதுவரை நான் ஆபீஸ் ரூமில் இருக்கிறேன்...'' என்று அந்தப் பெண்ணிடம் சொல்லிவிட்டு வேறு பக்கம் சென்றார் தாமஸ்.

அரங்கத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு அந்தப் பெண் திரும்பி வந்தபோது, தன் காருக்கருகில் தயாராக இருந்தார் தாமஸ். இருவரும் மீண்டும் ஓட்டலுக்குத் திரும்பினர்.

அந்தச் சதுக்கத்தை விலைக்கு வாங்கச் சம்மதித்தார் மெக்ஸிகோ பெண். இருவரும் பேசி விலையை முடிவு செய்த பின் பத்திரமும் பணமும் கைமாறின.

அடுத்த சில நிமிடங்களில் தன் அறையைக் காலி செய்துவிட்டு வெளியே வந்து காரில் ஏறி ஏர்ப்போர்ட்டுக்குச் சென்றான் தாமஸ் என்ற பெயரில் அந்தப் பெண்ணிடம் மோசடியில் ஈடுபட்ட பார்க்கர். இப்போது புரிந்திருக்குமே, ஓட்டலில் நகையை எடுத்தவனும் பார்க்கரின் ஆள்தான் என்று.

அந்தச் சதுக்கத்தின் மேனேஜராக நடித்தவனுக்கு ஏர்ப்போர்ட்டில் வைத்து அவனுக்கான பங்கைக் கொடுத்த பார்க்கர், அடுத்த ஒருமணி நேரத்தில் லாஸ் ஏஞ்சல்ஸ் செல்லும் விமானத்தில் பறந்து கொண்டிருந்தான்.

** ** *

வெளிநாடுகளிலிருந்து எல்லீஸ் தீவு வழியாக நியூயார்க்குக்கு வந்து குடியேறுபவர்கள் தான் பார்க்கரின் குறியென்று முன்பே சொல்லியிருந்தோம்.

ஜார்ஜ் சி பார்க்கரின் தொல்லையைத் தாங்க முடியாமல், 'நியூயார்க்கிலுள்ள புரூக்ளின் பாலம், சுதந்திரதேவி சிலை போன்ற பாரம்பரிய



அடையாளங்கள் அரசின் சொத்து. அவற்றை யாராவது விற்பதாகச் சொன்னால் நம்பாதீர்கள்' என்று எல்லீஸ் தீவில் பல மொழிகளில் போஸ்டர்களை அடித்து ஒட்டாத குறையாக அறிவிப்பைச் செய்தார்கள். அப்படியும் ஒன்றிரண்டு பேர், பார்க்கரிடம் ஏமாந்து கொண்டுதான் இருந்தனர்.

'எப்படியாவது பார்க்கரைப் பிடித்து விடவேண்டும்' என நியூயார்க் போலீசாரும், ரகசிய போலீசாரும் நகரம் முழுவதும் வலைவிரித்துக் காத்திருந்தனர். அந்த ஆண்டு கிறிஸ்துமஸ் பண்டிகையைக் கோலாகலமாகக் கொண்டாட நினைத்த பார்க்கர், புரூக்ளின் பாலத்தை மீண்டும் விற்க முயன்றபோது மாட்டிக்கொண்டான்.

போலீசார், 1928ஆம் ஆண்டு டிசம்பர் 17ஆம் தேதி, பாட்டா கிங்ஸ் கவுண்டி நீதிமன்றத்தில் நீதிபதி மெக்லாப்லின் முன்பு பார்க்கரை நிறுத்தினர். அவனது புகழ் (?!) அந்த நீதிபதிவரை ஏற்கனவே பரவியிருந்தது.

அப்பாவியைப் போல நின்றுகொண்டிருந்த அவனைக் கொஞ்ச நேரம் உற்றுப் பார்த்த நீதிபதி, இனியும் இவனை வெளியே விட்டால் அமெரிக்காவின் மானத்தைக் கப்பலில் ஏற்றிடுவான் என்று நினைத்தாரோ என்னவோ, ஆயுள் தண்டனையைக் கொடுத்துவிட்டார். அமெரிக்காவில் ஆயுள் தண்டனை என்றால் சாகும்வரையிலும் 'களி' தான். வெளியே வரவே முடியாது.

சிறையில் பார்க்கருக்கு என்று தனியாக ரசிகர் கூட்டமே இருந்தது. பூர்ணக் கும்பம், மாலை மரியாதை, மேளதாளம் வைக்காதது தான் பாக்கி. சிறையில் பார்க்கரைச் சுற்றி எப்போதும் ஒரு கும்பல் இருந்து கொண்டே இருக்கும்.

புரூக்ளின் பாலம், சுதந்திரதேவி சிலை, கிராண்ட் கல்லறை, மேடிசன் கார்டர்ன் சதுக்கம் போன்றவற்றை விற்ற கதைகளைச் சொல்லச் சொல்லிக் கேட்பார்கள். அவனும் சுவாரஸ்யம் குறையாமல் அந்தக் கதைகளைச் சொல்லுவான். கைதிகள் மட்டுமல்ல, காவலாளிகளும் அவனது ரசிகர் கூட்டத்தில் அடக்கம்.

இந்த இடத்தில் ஒரு விஷயத்தைச் சொல்ல வேண்டும். புரூக்ளின் பாலத்தை விற்ற முதல் ஆசாமி ஜார்ஜ் பார்க்கர் இல்லை. அவனுக்கும் ஒரு குரு இருக்கிறான். பெயர், வில்லியம் மெக்கன்லி. ஆனால், ஏமாற்று வித்தையில் பார்க்கரைப் போலத் திறமைசாலியில்லை.

நியூ ஜெர்சியைச் சேர்ந்த வில்லியம் மெக்ளவுண்டி, 1901இல் இந்தப் பாலத்தை விற்க முயன்று மாட்டிக்கொண்டு இரண்டரை ஆண்டுகள் சிறையில் இருந்தான்.

அவனுக்கு முன்னும் சிலர் புரூக்ளின் பாலத்தை விற்றிருக்கிறார்கள். ஆனால், அவர்கள் ஜார்ஜ் பார்க்கர் அளவுக்கு ஏமாற்றுக்காரர்கள் என்ற பேரைப் பெறவில்லை.

தன் கடைசிக் காலத்தை அமைதியாகக் கழிக்கவேண்டும் என்று நினைத்த பார்க்கர், தனது வாழ்வின் கடைசி எட்டு ஆண்டுகளைச் சிறையில் கழித்த நிலையில், 1936ஆம் ஆண்டு அங்கேயே இறந்தான். அவன் இறந்து விட்டாலும், அவனது புகழ் (?!) இன்றும் பேசப்படுகிறது.

அமெரிக்காவின் நியூயார்க் நகரத்தில் புரூக்ளின் பாலத்தின் மீது நடக்கும்போதும், கிராண்ட் கல்லறை, சுதந்திர தேவி சிலை, மேடிசன் கார்டன் சதுக்கம் ஆகியவற்றைக் கடக்கும்போதும் ஜார்ஜ் பார்க்கரைப் பற்றி நினைக்காமல் இருக்க முடியாது, இவற்றை எத்தனை முறை ஜார்ஜ் சி பார்க்கர் விற்றிருப்பான் என்று.

●

# எந்தக் குழந்தையும் நல்ல குழந்தை தான் அன்னை வளர்ப்பினிலே!

**- சிவக்குமார்**



**கண்ணதாசன் ஒரு பாட்டில் சொல்லியிருப்பார். காலங்களில் அவள் வசந்தம். கலைகளிலேயே அவள் ஓவியம்ன்னு...**

புனிதமான, தெய்வீகமான கலை என்றால் ஓவியம்தான். இந்த கலையில் நீங்கள் தப்பே பண்ண முடியாது. எல்லா கலைகளிலும் தவறு செய்ய வாய்ப்பு உள்ளது. இதில் அப்படி கிடையவே கிடையாது.

ஒரு படத்தைப் பார்த்து ஆயிரம் தவறுகள் சுட்டிக்காட்டலாம். ஆனால், ஒரு பிஞ்சு குழந்தை, கற்பனை செய்து, சிவன்னா தலையில் நிலா போடணும். கழுத்தில் பாம்பு போடணும்.. புலித்தோல் போடணும்ன்னு கற்பனை செய்து போடுது பாருங்க.. அந்த விஷயத்திற்கு முன்னாடி மற்றவையெல்லாம் ஒன்றும் இல்லை.



சித்திரமும் கை பழக்கம் என்ற பழமொழி ரோட்டில் போறவனுக்கு இல்லை. யார் கிட்ட இன்பிரேஷன் இருக்கோ.. திறமை இருக்கோ அவர்களுக்குத்தான் சித்திரமும் கை பழக்கம் என்ற பழமொழி பொருந்தும். ரொம்ப குறைவான மக்களாலேதான் அதை பண்ண முடியும்.

பள்ளியில் நான் படிக்கும்போது 55 சதவீதம் தான் மார்க் போடுவாங்க. இப்போ எல்லாம் 5 பாடங்களில் சென்டம் வாங்குனவாங்கலாம் இருக்காங்க. எங்க காலத்தில் அப்படியெல்லாம் மதிப்பெண் போடவே மாட்டாங்க. அவங்ககிட்ட படித்து, நொந்து போய், படிப்பை விட பெயின்டிங்கில் திறமை இருக்கிறது என்பதை நான் 16 வயதில் புரிந்து கொண்டேன்.

அப்போ 1958-59 ஆம் ஆண்டில் உதாவக்கறை படிப்புன்னா அது பெயின்டிங் தான். உருப்படுவே மாட்டடா! வாழ்க்கை மூடுஞ்சு போச்சுன்னு சொல்லிடுவாங்க. அப்படிப்பட்ட உதவாகரபடிப்பை வைத்துக்கொண்டுதான் நான் மெட்ராஸுக்கு வந்தேன். அந்த காலத்தில் தாத்தாங்கலாம் விக்கிரமாதித்யன் கதைகளையெல்லாம் படிப்பாங்க. அவங்கஎல்லாம் இந்த பெயின்டிங்கை பற்றி அவ்வளவு கேவலமாக பேசுவார்கள்.

“யோவ்.. டாக்டரா.. கலெக்ட்ரா.. வக்கீலா.. எந்த படிப்பு 6 வருடம் படிப்பு”னு கிண்டலா கேட்பாங்க. அப்போ அந்த கிழவனிடம் “தஞ்சாவூர் போயிருக்கியா.. திருப்பதி போயிருக்கியான்னு கேட்டு, கோவில் ஓவியத்தைக் காட்டி..

இது தஞ்சாவூர் கோவில். இந்த கோவிலில் ஒன்றரை கிலோ மீட்டர் மண்ணு போட்டு, கல்லை கொண்டுபோய் கோபுர உச்சியின் மேல வைத்து, அதன் மேல் கலசம் வைத்திருக்கிறாங்க. இந்த நிழல் வந்து கோவில் காம்பவுண்ட் உள்ளேதான் இருக்கும்" னு சொல்லி மிரட்டுவேன்.

"இவன் மகா கெட்டிக்காரன். இவனை விட்டுங்க. இவன் பொலைச்சுப்பா"ன்னு சொல்லி அனுப்பினாங்க. அப்படியெல்லாம் நான் தப்பித்து மெட்ராஸிக்கு வந்தேன்.

மனித இனம், உடைகள் அணியாமல் இலைகளை உடலில் கட்டிக்கொண்டு இருந்த காலக்கட்டங்களிலேயே, யானை, புலி, சிங்கம், மான் என ஒன்றையும் விடாமல் அடித்துக் கொள்ளும்போதே, அவன் இந்த குகைகளிலேயே கறுப்பு கரியை எடுத்துப்போய் மிருங்களை வரைந்திருக்கிறார்கள்.

அந்த காலத்திலேயே ஓவியம் வரைய ஆரம்பித்திருக்கிறார்கள். அப்படி இருந்த கலை அப்படியே படிப்படியாக வளர்ச்சி அடைந்துள்ளது.

இந்தியாவில் உள்ள அஜந்தா, எல்லோரா மாதிரி சிற்பங்களும், ஓவியங்களும் உலகத்திலேயே கிடையாது. ஒரு மலையை தேர்வு செய்து அதில் படிப்படியாக ஓவியங்களை செதுக்கி வெற்றி பெற்றுள்ளார்கள். உலகத்திலிலேயே இதுமாதிரி கிடையாது.

ராமாயணம், மகாபாரதம் போன்ற இதிகாசங்கள் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முந்தையது என்று சொல்கிறார்கள். அந்த இதிகாசங்களின் தாக்கங்கள், எல்லோரா சிற்பத்தில், ராமன் காட்டுக்கு போற மாதிரி, அம்பு எய்கிற மாதிரி, ராவணன் சீதையை கடத்துவது போல, அனுமன் இலங்கைக்குப் போவது போல, இதெல்லாம் ஒன்றன் பின் ஒன்றாக என்டையர் எல்லோராவில் வரைந்திருக்கிறார்கள்.

யோசனை பண்ணி பாருங்கள்.. அஜந்தா பெயின்டிங்கில் மலர்களிலேயே மஞ்சள், சிவப்பு, பச்சை, நீலம், என்று எடுத்து அதை அரைத்து கொஞ்சம் கெமிக்கல் கலந்து, அதில் பெயின்டிங் பண்ணியிருக்கிறார்கள். 2200 வருடங்கள் அந்த கலர்கள் அப்படியே இருக்கின்றன. எந்த மாதிரியான மெட்டிரியல்ஸ் பயன்படுத்தியிருக்கிறார்கள் என்று யாருக்கும் தெரியாது. அந்த அளவுக்கு அவர்களின் திறமை இருக்கிறது.

நான் காலையில் கடற்கரைக்கு சென்று பார்க்கும் போது ரொம்ப அழகாக இருக்கும். கடலில் மேகம் ஒரு ஸ்டோக்தான் இருக்கும். கடலில் வந்து மோதும்போது லைட்டா ஒரு மேகம் ஒயிட்டா தெரியும். ஒரு மேகம் நீலமா இருக்கும்.

அதே மாலையில் பார்த்தீர்கள் என்றால் சிவப்பு டோனாகி.. ரொம்ப அழகாக இருக்கும். கன்னியாகுமரியில் விவேகானந்தர் பாறைக்கு போகும்போது பார்க்கலாம். எப்படியெல்லாம் அந்த மேகங்கள் போகுது. எப்படியெல்லாம் சூரியனை கடக்குதுன்னு அரை மணி நேரம் உட்கார்ந்து மூளையில் அப்படியே வாங்கி.. ஒரு ஓவியத்தை தேர்ந்தெடுத்துக்கணும்.

இரண்டாவது, வாட்டர் பெயின்ட்டில் ஒரு கோடு மாதிரி போட்டுக்கனும். நம்ம ஓவியம் வரைந்து முடிக்கிறதுக்குள்ள.. எப்படியெல்லாம் மேகம் வருகிறதோ அதையெல்லாம் மிக்ஸ் பண்ணி வரையணும்.

எல்லாருக்குமே பேசிக்கலா கண்ணு இருக்கிறது. காந்தி, ஆப்பிரகாம் லிங்கன் படத்தையெல்லாம் பார்த்தீருப்பீர்கள். காந்தியின் சின்ன வயது புகைப்படத்தை பார்த்தீர்கள் என்றால்.. காந்திக்கு கண்களும், காதுகளும் கொஞ்சம் பெருசா இருக்கும். கை மட்டும் முழங்கால் வரை நீளமாக இருக்கும். மார்பு அகலம் குறைவாக இருக்கும். அவருக்கு வயதாகி, பொக்கவாய் ஆகி, கண்ணாடி போடும்போது முகம் ஒட்டி, பொக்கை வாயாக



இருக்கும்.

அதேபோல்ஆப்பிரகாம் லிங்கனின் முகம்கூட ஒடுங்கி போய் இருக்கும். நேருவின் புகைப்படத்தை பார்த்தீர்கள் என்றால் முட்டைக் கண். மூக்கு.. கிளிமூக்கு மாதிரி இருக்கும்.

கருணாநிதிக்கு 91 வயது ஆகிறது. கருணாநிதி பல்லைக் காட்டாத போட்டோ பார்க்கவே முடியாது. அவர் பல் அழகாக இருக்கும். அவர் இன்னும் ஒரிஜினல் பல்லோடு இருக்கிறார். எப்போமே சிரிச்சேங்கன்னா, மனதளவில் நீங்க அழகாக இருக்கிறீர்கள் என்று அர்த்தம். போட்டோ எடுக்கும்போது பயப்படதாங்கீங்க.. பல்லைக் காட்டி சிரிங்கங்க.. நீங்கள் உங்களை 10 போட்டோ எடுத்துப்பாருங்க. உங்களை போட்டோவில் பார்த்தவுடன் அவ்வளவு சந்தோஷம் வரும்.

நேருவின் மூக்கு கொஞ்சம் வளைஞ்சு இருக்கும். இந்திராகாந்திக்கு மூக்கு நேராக இருக்கும். காமராஜரின் உதடு தென்னிந்தியர்களுக்கான பிரத்யேக உதடு. அவருக்கு உதட்டில் மேல்புறமும் பெருசா இருக்கும். கீழ்புறமும் பெருசா இருக்கும்.

நேருவின் உதடு ஒரு சிங்கள் லைன் தான் இருக்கும். கீழ்உதடு கொஞ்மாகதான் இருக்கும். இந்திராகாந்திக்கு மேல் உதடு கொஞ்சம் பெருசா இருக்கும். படம் வரைவதற்கு முன்னாடி ஒருத்தரை பார்த்தவுடன் அவர் எப்படி இருக்கிறார் என்று தெரிஞ்சுக்கணும்.

அப்படி கற்பனை பண்ணா தான், படம் வரைய முடியும். கழுத்தில் வயதான பிறகு வரும் சுருக்கமான கோடு வேறு. ஆனால், சின்ன வயதிலேயே சில பேருக்கு கோடு இருக்கும். அது வேறு. அது குறைபாடு இல்லை. அழகானவர்களுக்கு மைனஸ் பாய்ண்ட் இது. அழகான உருவம் எப்படி என்று பார்த்தால் இந்த விஷயங்களையெல்லாம் பார்க்க வேண்டும். இதையெல்லாம் ஸ்டெடி பண்ணிட்டு நீங்கள் ஓவியம் வரைய வேண்டும்.

எனக்கு முருகன் வேஷம் கொடுப்பதற்கு முன் என் முகத்தை பல கோணங்களில் பார்த்தார்கள். எனக்கு கண்ணு, மூக்குகெல்லாம் நல்லாதான் இருக்கும்.








லைட் வெளிச்சத்துல சிரிக்க சொன்னாங்க. சிரிச்சவுடன் சிங்கப்பல் தெரிந்தது. இவனை ஓ.கே. பண்ணலாமா என்று யோசித்தார்கள். முருகனுக்கு பல்லழகன் என்று பெயர். இவனை சிரிக்கச் சொன்னால் சிங்கப்பல் தெரியுதே. அதுதான் இடிக்குதுனு அவங்க பேசிக்கிட்டாங்கன்னு ஒருத்தர் சொன்னார்.

இன்னொருத்தர் உள்ளேயிருந்து ஒருத்தர் வந்து "உன்னை நடிக்க ஓ.கே. பண்றாங்க. ஆனால், உனக்கு சிங்கப்பல் இருக்கிறதால கொஞ்சம் தயங்குகிறாங்கன்னு சொன்னார். உடனே நான், சிவாஜி பராசக்தி படம் பண்றதுக்கு முன், அவருக்கு இருந்த சிங்கப்பல்லை பிடுங்கின அந்த டாக்டரிடம் சென்று என் சிங்கப்பல்லை பிடுங்கிவிட்டேன்.

2 நாட்கள் கழித்து நான் சென்றேன். டைரக்டர், "நீங்கள் நடிக்க ஓ.கே.தான். ஆனால், அந்த சிங்கப்பல்தான்" என்று இழுத்தார். உடனே நான், "எந்த சிங்கப்பல்லு"னு சொல்லி சிரித்தேன். "எங்கே என் உன் சிங்கப்பல்" என்று டைரக்டர் கேட்டார். "நான் அதை பிடுங்கிவிட்டேன்" என்று சொன்னேன். "நல்லது" என்று சொல்லி சிரித்தார்.

எந்த குழந்தையும் திறமையற்ற குழந்தைகள் கிடையாது. ஒரு குழந்தையை திறமையான குழந்தையாக வளர்ப்பது பெற்றோர்கள் கையில் இருக்கிறது. பெற்றோர்கள், தங்கள் குழந்தை, டைரக்டரா வருவானா.. நல்ல பேச்சாளனா வருவானா.. சிங்கரா வருவானா.. ஓவியனா வருவானா.. இசை ஆர்வம் இருக்கா.. விளையாட்டில் வருவானா.. என்பதை புரிந்துகொண்டு அதற்கான பயிற்சி கொடுத்தால் போதும். புகழ் பெற்ற பிள்ளையாக விளங்குவார்கள்.

# பெண் வயிற்றில் பிறக்காத துரோணர்



சரஸ்வதி

**உலகில் ஒரு உயிரின் பிறப்பானது, ஆணும், பெண்ணும் இணைந்த பின், பெண் தன் கருவில் பத்து மாதங்கள் சுமந்து, ரத்தமும், சதையுமாகப் பிறக்கும்.**

இதுதான் மானுட உயிர்களின் பரினாம வளர்ச்சி. ஆனால், மகாபாரதத்தில் வரும் துரோணரின் பிறப்பானது முற்றிலும் இயற்கைக்கு மாறானது.

### துரோணரின் பிறப்பு

துரோணர், கௌரவர்களுக்கும், பாண்டவர்களுக்கும் குரு. அஸ்திரக் கலையில் சிறந்தவர். துரோணாச்சாரியார் என்று அனைவராலும் தூக்கி வைத்து கொண்டாடப்பட்டவர்.

இவர், அஷ்ட வசுக்களில் ஒருவரும், தேவ குருவுமான பிரகஸ்பதியின் மகனான பரத்துவாசரின் மகன். பரத்துவாச முனிவர் தனது தவ வலிமையால் உலகமெங்கும் பயணித்து வரும் போது, க்ருடசி என்ற கந்தர்வக் கன்னியைக் கண்டார். கண்டவுடன் அவள் மீது காதல் கொண்டார். அந்த கந்தர்வக் கன்னியைக் கண்டு காதல் கொண்ட மாத்திரத்திலேயே, அவரிடமிருந்து வெளிப்பட்ட விந்துவை ஒரு பானையில் செலுத்தினார். பானையில் இருந்து பிறந்தார் துரோணர்.

பானையின் மூலம் குழந்தையா? இது எப்படி சாத்தியம்? என்ற கேள்வி எழலாம். இதைப் பற்றி தெரிந்து கொள்ள கொஞ்சம் விரிவாகப் பார்ப்போம்.



பரத்வாஜ மகரிஷி தேவ குருவான பிரகஸ்பதியின் மகன் என்பதை ஆரம்பதிலேயே பார்த்தோம். அது மட்டும் இல்லை. சப்த ரிஷிகளுள் முக்கியமானவர் பரத்வாஜ மகரிஷி. இவர் இயற்பியலில் வல்லுனர் மட்டுமல்ல. ஆயூர்வேத மருத்துவத்திலும் சிறந்தவர்.

ஆயுர்வேத நூல்களில் முக்கியமானது சக்ர சம்ஹிதா என்ற நூல். இதை எழுதியவர் பரத்வாஜ மஹரிஷி. ஆயுர்வேத மருத்துவம் மட்டுமல்லாமல் பல ஆராய்ச்சிகளையும் உள்ளடக்கியது. இதில் அவர் தெளிவாக, ஒரு ஆணின் விந்தணுவை மட்டுமே வைத்துக் கொண்டு, பெண்ணின் துணையில்லாமல் எவ்வாறு ஒரு கருவை உருவாக்கலாம் என்பதை ஆராய்ந்து எழுதியுள்ளார். அந்த ஆராய்ச்சியில் பலன் தான் துரோனாச்சாரியார்.

சக்கர ஸம்ஹிதா ஏட்டில் சீராக மாதவிடாய் ஏற்படும் பெண்ணின் மாதவிடாய் ரத்தத்தில் இருந்து கருமுட்டை உருவாக்கி, அதில் ஆணின் விந்தணுவை சேர்த்து கரு உண்டாக்கலாம் என்பதை குறிப்பிட்டிருக்கிறார்.

அதன்படி, கந்தர்வ கன்னியின் மாதவிடாய் ரத்தத்தின் மூலம்

பரிசோதித்து துரோணர் என்னும் கருவை உருவாக்கி அதில் வெற்றியும் கண்டார் பரத்வாஜ மகரிஷி.

### நட்பும்., பகையும்

இப்படி ஒரு மாபெரும் பிறப்பைப் பெற்ற துரோணர் தன் மகன் மீது கொண்ட பாசத்தினால்தான் தர்மத்தை தவறினார்.

பரத்வாஜ் மகரிஷியும், பாஞ்சால தேசத்து அரசனும் நண்பர்கள். அந்த அரசனின் மகன் துருபதன். துரோணரும் துருபதனும் ஒரே ஆசிரமத்தில் குருகுல கல்வி பயின்று வந்தனர். துரோணர் வேத சாஸ்திரங்களையும், அஸ்திர பயிற்சிகளையும் நன்கு கற்றார். துருபதன் அஸ்திர பயிற்சியை கற்று வந்தான்.

இருவரும் சிறுவயதில் உற்ற நண்பர்களாக இருந்து வந்தனர். படிப்பும், பயிற்சியும் முடித்து அனைவரும் ஆசிரமத்தை விட்டு புறப்படும் நேரம் வந்தது. துருபதன் தன் நண்பனாகிய துரோணரை விட்டு பிரிவதை எண்ணி கண்ணீர் வடித்தான்.

'துரோணா! நான் பாஞ்சால தேசத்துக்கு மன்னராக பட்டம் சூட்டியதும், என்னுடைய ராஜ்ஜியத்தில் பாதியை உனக்குத் தருகிறேன்' என்று துரோணாச்சாரியாருக்குத் வாக்களித்தார். துரோணரின் நெஞ்சம் நண்பனின் வார்த்தையால் நெகிழ்ந்து போனது.

ஆசிரம வாசம் முடிந்ததும் துரோனர், கிருபாச்சாரியாரின் சகோதரியை மணந்தார். அவர்களுக்கு அசுவத்தாமன் என்ற மகன் பிறந்தான். மனைவியையும், மகனையும் நல்லபடியாக வாழ வைக்க அவருக்கு செல்வம் தேவையாக இருந்தது.

அப்போது தன் நண்பனான துருபதன் தனக்கு அளித்த வாக்குறுதி, அவருக்கு நினைவிற்கு வந்தது. ஏதாவது பொருளுதவி செய்து தனது வறுமையை போக்குவார் நண்பன் துருபதன் என்ற நம்பிக்கையுடன் வந்த துரோணருக்கு, ஏமாற்றமும், அவமானமும் பரிசாகக் கிடைத்தது.

"நண்பா எனக்கு உதவி செய்" என்ற துரோணரிடம்.., "நான் பாஞ்சாலத்தின் அரசன். யாசகம் வேண்டும் என்றுக் கேள். 100 பசுக்களை



தானமாகக் கொடுக்கிறேன். நண்பன் என்றுக் கூறாதே. பஞ்சத்தில் வாழ்பவனுக்கு அரசன் எப்படி நண்பனாக முடியும் என்று துரோனரின் நிலையை சுட்டிக் காட்டி அவமானப்படுத்தினான்.

"என்னுடைய பெரும் செல்வம் நான் கற்றக் கல்வி தான். அதைக் கொண்டு நான் உன் அகந்தையை அழிப்பேன். சிறந்த அரச சீடர்களை தேர்ந்தெடுத்து,அவர்களுக்கு வித்தைகளை கற்பித்து என் சீடர்களிடம் குரு தட்சனையாக பொன் பொருளையல்ல, உன் நாட்டை குருதட்சனையாக பெறுவேன்" என்று சபதம் போட்டார் துரோணர்.

அவரின் சபத்தை நிறை வேற்ற அஸ்தினாப்புரத்து இளவரசர்களைத் தேர்ந்தெடுத்தார். கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் பயிற்சி அளித்தார். பயிற்சி முடிந்ததும் குருதட்சணை கொடுக்க வேண்டும். எல்லா சீடர்களும் அவரின் கட்டளைக்காக காத்திருந்தனர்.

துரோணரோ, 'எனக்கு நீங்கள் குருதட்சணை கொடுக்க விரும்பினால், பாஞ்சால தேசத்தைக் கைப்பற்றி, பாஞ்சால மன்னன் துருபதனைப் பிடித்து வந்து, என் முன்பாக நிறுத்துங்கள்' என்றார். வில்வித்தையில் பெயர் பெற்ற அர்ச்சுனன் ஒருவனே, துருபதனை வென்று துரோனரின் முன்பாக கொண்டு வந்து நிறுத்தினான்.

தன் முன்பாக கைகள் கட்டப்பட்டு நின்ற துருபதனைப் பார்த்தார் துரோணர். முன்னாள் நண்பன் மீது பரிதாபம் ஏற்பட்டது. பஞ்சாலத்தை



### அரச இலை தொன்னை?

துரோணரின் பிறப்புப் பற்றி சிலர் மண் பானையில்தான் அவரின் பிறப்பானது உருவானது என்கின்றனர். சிலர் அரச இலை தொன்னை என்றும் கூறுகின்றனர்.

இதற்கு ஆதாரமாக அவர்கள் சொல்லும் கருத்துக்களை பார்ப்போம்.

பரத்வாஜ் மகரிஷியின் ஆராய்ச்சி வெற்றியடைய முக்கியக் காரணமாக அமைந்தது அரச இலை தொன்னை தான். பொதுவாக அரச இலை, அதிக பிரான வாயுவை சேர்க்கவல்லது. அதை தன்னுள் வைத்திருக்காமல் வெளிப்படுத்தவும் செய்யும். கரு வளர்ச்சிக்கு அபரிமிதமான பிராணவாயு தேவை. அதனால்தான் பரத்வாஜ மகரிஷி தொன்னையை தேர்ந்தெடுத்திருக்கிறார் என்கின்றனர்.



Gerrit Jan Meulenbeld என்னும் ஆராய்ச்சியாளர், இந்திய மருத்துவமுறை குறித்து ஐந்து பாகம் கொண்ட "The History of Indian Medical Literature" என்ற புத்தகங்களை எழுதியுள்ளார். இதில் பரத்வாஜரின் சக்கர ஸம்கிதா என்னும் ஏட்டை பற்றியும் அதில் அவர் செய்த ஆராய்ச்சியையும் குறிப்பிட்டு கூறியிருக்கிறார்.

பெண்ணின் துணையில்லாமல், ஆணின் விந்தணுவை மட்டுமே வைத்துக் கொண்டு ஒரு கருவை ஜெனிப்பது எப்படி என்ற ஆராய்ச்சி, 2002 ம் ஆண்டு முதல்நடைபெற்று வருகிறது.

Gerrit Jan Meulenbeld அவர்களின் கூற்றின் படி, இந்த ஆராய்ச்சியின் முன்னோடி பரத்வாஜ மகரிஷிதான் என்று கூறியிருப்பதை கவனிக்க வேண்டும்.



Gerrit Jan Meulenbeld அவர்களின் ஆராய்ச்சியை இங்கு ஆதாரமாக காண்பிப்பதற்கு காரணம், நம் ஆன்மிகத்தின் பெருமையும், அதில் உள்ள விஞ்ஞானத்தையும், நம் முன்னோர்களின் அறிவுத்திறனையும், வெளிநாட்டினர் சொன்னால் தான் நம்புவார்கள் என்பதற்காகத்தான்.

இரண்டுப் பாதியாக பிரித்து அதில் முதல் பாதியில் தன் மகன் அஸ்வத்தாமனை அரசனாக அமர்த்தினான். இரண்டாவதுப் பாதியை துருபதனுக்கு அளித்து மீண்டும் துருபதனை நண்பனாக ஏற்றான்.

தன் மகன் அஸ்வந்தாமனுக்கு நல் வாழ்வை அளிக்க வேண்டும் என்ற நல்ல தந்தையாக துரோணரின் ஆசை நிறைவேறியது. துரியோதணனிடம் மிகுந்த நட்பு பாராட்டினான் அஸ்வத்தாமன்.

மகன் கூடா இடத்தில் நட்புறவாடுகிறான் என்று அறிந்தும் கண்டிப்பதற்குப் பதிலாக கௌரவர்களுக்கு ஆதரவாக பாரதப் போரில் துரோணர் அஸ்வந்தாமனுடன் சேர்ந்து பாண்டவர்களுக்கு எதிராக போரிட்டார்.

துரோணர் ஐந்து நாட்கள் கௌரவப் படைகளுக்கு தலைமைப் படைத்தலைவராக தலைமை தாங்கி பாண்டவப் படைகளை நிர்மூலம் செய்தார்.

### துரோணர் மரணம்

துரோணரை எப்படி செயலிழக்க செய்வது என்று நினைத்த கிருஷ்ணன், அதர்மத்தை தர்மத்தால் வெல்லலாம். ஆனால், சூழ்ச்சியை தான் வெல்ல வேண்டும் என ஒரு திட்டம் போட்டார். அதன்படி, தர்மரை, அஸ்வத்தாமன் இறந்தான் என்றப் பொய்யை கூறச்சொன்னான் கிருஷ்ணன். பொய்க் கூற மறுத்து விட்டான் தர்மன் .

"அஸ்வத்தாமா என்னும் யானை இறந்துவிட்டது. அச் செய்தியை கூறு" என்றான் கிருஷ்ணன். அதற்கான வார்த்தையை சொல்லிக் கொடுத்தார். அதன்படி தர்மர், "அஸ்வத்தாமா ஹதா" என்று சொல்லி பின்னர் கடைசியில் "குஞ்ஜர்" எனும் வார்த்தையைச் சேர்த்தார். குஞ்ஜர் என்றால் இறந்தான் என்று அர்த்தம்.

தர்மர் இந்த வார்த்தையை சொல்லும் போது, கடைசி வார்த்தை காதில் விழாதபடி கிருஷ்ணர் தன் சங்கான பாஞ்சசன்யத்தை முழக்க, மகன் இறந்ததாக நினைத்து மனமொடிந்து, வில்லை கீழே போட்டார் துரோணர்.

எந்த மகனுக்காக அதர்மத்திற்கு துணைபோனாரோ, அந்த மகனே இறந்துப் போனதை எண்ணி மனம்முடைந்துப் போனார் துரோணர். இறுதியில் திரௌபதியின் சகோதரர் திருட்டத்துயும்மனால் கொல்லப்பட்டார். போருக்குப் பின்னர், திருட்டத்யூமன் துரோணர் மகன் அஸ்வத்தாமாவால், கொல்லப்பட்டார்.



# கருகிய ரொட்டி யாரையும் காயப்படுத்தப் போவதில்லை




மறைந்த அப்துல்கலாம் அவரது இளமைக்கால வாழ்க்கையில் ஒரு சம்பவம்:

"நான் சிறுவனாக இருக்கும் போது ...ஒரு நாள் இரவு நேரம் ... வெகு நேர வேலைக்கு பின்னர் என் தாய் இரவு சிற்றுண்டி செய்யத் தொடங்கினார்...

என் தாயும் எங்கள் குடும்பத்தை சமாளிக்க வேலைக்கு செல்வது வழக்கம்...

சமைத்த பின் கருகிய ரொட்டி ஒன்றை என் கண் முன் , என் தந்தைக்கு பரிமாறினார் என் தாய் ..... ஆனால் என் தந்தையோ அதை சிறிதும் பொருட்படுத்தாமல் சாப்பிட்டார்....

"இன்றைய பொழுது பள்ளியில் எப்படிப் போனது' என்று என் தந்தை என்னிடம் கேட்டார். நான் அன்று என்ன பதில் சொன்னேன் என்று தெரியவில்லை ..

என் தந்தையிடம் கருகிய ரொட்டியை பரிமாறியதற்கு வருத்தம் தெரிவித்தார் என் தாய். ஆனால் அதற்கு என் தந்தையோ .."எனக்கு கருகிய ரொட்டிதான் ரொம்ப பிடிக்கும் " என்று பதில் சொன்னதை என்னால் இன்றும் மறக்க முடியாது.

சாப்பிட்டு முடித்த சற்று நேரத்துக்குப் பின்... நான் மெல்ல என் தந்தை அருகில் சென்று இரவு வணக்கம் சொல்லிவிட்டு , அவரிடம் தயக்கத்துடன் கேட்டேன்: " அப்பா... உங்களுக்கு உண்மையாகவே கருகிய ரொட்டி ரொம்பப் பிடிக்குமா..?"

சற்று நேரம் அமைதியாக இருந்த என் தந்தை , என்னை இறுக்கமாக அணைத்துக் கொண்டு சொன்னார்.... " மகனே...உங்க அம்மா தினமும் வேலைக்கும் சென்று கொண்டு , நமக்கும் பணிவிடை செய்கிறார் .. களைத்துப் போய் இருப்பார் ...

ஒரு கருகிய ரொட்டி யாரையும் காயப்படுத்தப் போவதில்லை. ஆனால் கடும் வார்த்தைகள் கண்டிப்பாக காயப்படுத்தும். நான் ஒன்றும் சிறந்த மனிதன் அல்ல ... ஆனால் அதற்கு முயற்சிக்கிறேன்.

இவ்வளவு வருடங்களில் நான் கற்றுக்கொண்டது. நடப்பது எதுவாக இருந்தாலும் அதை ஏற்றுக்கொண்டு சந்தோஷமான மனநிலைக்கு நாம் மாறுவதே" என்றார்.

# 'திருடர்' கிளைவ்

லட்சுமணசாமி முதலியார் ஆங்கிலத்தில் உரையாற்றுகிறார். அதை உடனுக்குடன் தமிழில் மொழிபெயர்க்கிறார் அண்ணா. 'ராபர்ட் கிளைவ் கேம் டு இண்டியா அண்ட் பிகேம் ராபர் கிளைவ்' என்று லட்சுமணசாமி முதலியார் பேசினார்.

'ராபர்ட் கிளைவ் இந்தியாவுக்கு வந்தார். ஆனால் திருடனாக மாறி விட்டார்' என்றுதான் இதைத் தமிழில் பொதுவாக மொழிபெயர்ப்பார்கள். ஆனால், அந்த ஆங்கிலச் சிலேடையைத் தமிழிலும் சிலேடை நயம் தோன்ற மொழிபெயர்த்தார் அண்ணா. கேட்டவர்கள் அசந்து போனார்கள்.

அண்ணா மொழி பெயர்த்துச் சொன்ன வாக்கியம் இதுதான்: 'திரு கிளைவ் அவர்கள் இந்தியாவுக்கு வந்து திருடர் கிளைவாக மாறினார்!'

# பாடை வரும்!



இசை கலைஞர்கள் விழா ஒன்றில் கருணாநிதி கலந்துகொண்டார். விழாவுக்கு பட அதிபர் முக்தா சீனிவாசன் தலைமை. அவர் பேசும்போது, " இசை பற்றி எனக்கு எதுவும் தெரியாது. என்ன பேசுவது என்று புரியவில்லை. கலைஞரிடம் பேச்சு கொடுத்தால், அவர் ஏதாவது சொல்வார். அதை வைத்து ஒப்பேற்றிவிடலாம் என்று நினைத்து கலைஞரிடம் பேசினேன்.

"உங்களுக்குப் பாட வருமா? என்று கேட்டேன். அதற்கு அவர் "இப்ப வராது. கொஞ்ச நாள் கழித்து வரும்" என்றார். எனக்குப் புரியவில்லை. அருகில் இருந்த இளையராஜா புரிந்துகொண்டு சிரித்தார்" என்றார்.

"கொஞ்ச நாள் கழித்து பாட (பாடை) வரும்" என்று சிலேடையாகக் கருணாநிதி கூறியதை பிறகுதான் புரிந்துகொண்டார் முக்தா சீனிவாசன்.



# நடிகையர் திலகம் எனும் சகாப்தம்

■ சஹாரா சுப்புராஜ்



**சி**னிமாவில் நடிக்க வேண்டும் என்று ஆண்கள் விரும்பினாலே, "அதெல்லாம் வேண்டாம், நமக்கு ஒத்துவராது" என்று இன்றளவும் சிலர் சினிமாத்துறையை பற்றி யோசிக்கும் நிலையில், 3 தலைமுறைகளுக்கு முன்பே சினிமாத் துறையில் கால்பதித்து, ஆண் நடிகர்களுக்கு இணையாக கொடிக்கட்டிப் பறந்தவர் சாவித்திரி.

"நடிகையர் திலகம்" என்று அன்றும் இன்றும் அழைக்கப்பட்ட, அழைக்கப்படும் ஒரே நடிகை.

எதார்த்த நடிப்பு, அழகான பதுமை, வெகுளியான குணம், உதவி என்று கேட்பவர்களுக்கு இல்லையென்றுக் சொல்லாமல் அள்ளி அள்ளிக் கொடுக்கும் மனம். இவையெல்லாம் தன்னுள் அடக்கியவரே நடிகை சாவித்திரி.

ஆந்திராவில் குண்டூரில் சிறாவூர் என்ற இடத்தில் நிசங்கார ராவ் குருவையா, சுபத்திராம்மா ஆகியோருக்கு 1935 ம் ஆண்டு டிசம்பர் 4 ம் தேதி பிறந்தவர். சிஸ்டா பூர்ணையா சாஸ்திரிகளிடம் இசை மற்றும் நடனம் பயின்றார். இளம் வயதிலேயே மேடை நாடகங்களில் நடித்தார். இவரது இயற்பெயர் கொம்மாரெட்டி சாவித்திரி. அனைவரும் சாவித்திரி என்று அழைத்தனர்.



அவரின் சிறப்புகள் பற்றி மற்றவர்கள் கூற கேட்டிருப்போம். அவர் சினிமாவில் சினிமாவில் தடம்பதித்த பிறகு அளித்த முதல் பேட்டியில் தன்னைப் பற்றி எல்லா விவரங்களையும் சொல்லியிருக்கிறார்.

அவர் இறப்பதற்கு ஒரு வருடத்துக்கு முன், அதாவது, 1971 ம் ஆண்டு ஹைதராபாத், "விஜயவாட ஆகாசவாணி" வானொலிக்கு கொடுத்த பேட்டி இது.

"சிறு வயதில் நான் குழந்தைகளுக்கான பாட்டுப் பாடும் நிகழ்ச்சியில் அடிக்கடி கலந்துக்கொள்வேன். நடனத்தில் எனக்கு ஆர்வம் இருந்ததால் நடனம் கற்றுக்கொண்டேன். நடன நிகழ்ச்சிகளை பார்ப்பதற்கும், அதில் பங்கு பெறுவதற்கும் எனக்கு மிகவும் பிடிக்கும்.

எங்கள் வீட்டில் அடிக்கடி, "நீ நன்றாக நடனமாடுகிறாய்.

அழகாக இருக்கிறாய். சினிமாவில் நடித்தால் நன்றாக இருக்கும்" என்பார்கள். அது வார்த்தைக்கு மட்டுமே. ஆனால், நிஜத்தில் குடும்பத்து பெண்கள் சினிமாவில் நடிக்கவே கூடாது" என்றார்கள்.

நான் நடனப் பயிற்சி தொடங்கிய இரண்டு மூன்று வருடங்கள் வரை என்னிடம் விலகி நின்றனர். "என்னால் சாதிக்க முடியும். சினிமாவில் வெற்றிப் பெறுவேன் என்று தெரிந்தவுடனே, எனது பெரியப்பா எனக்கு உறுதுணையாக நின்றார். என்னை ஊக்கப்படுத்தினார். பின் சென்னைக்கு அழைத்து வந்தார். சென்னையில் ஜெமினி ஸ்டுடியோவில் பெரியப்பாவிற்கு பழக்கமானவர் ஒருத்தர் இருந்தார். அவரைக் காணச் சென்றோம்.

அங்கு என்னைப் பார்த்து விட்டு, நடனம் என்னவோ நன்றாகத் தான் ஆடுகிறாள். ஆனால் இன்னும் இரண்டு வருடம் போகட்டும்., ரொம்ப சின்னப் பொண்ணாக இருக்கிறாள். பிறகு அழைத்துவாருங்கள் என்றார்.

நல்லதாக போயிற்று. ஒழுங்கா நடனம் கற்றுக்கொள்ளலாம். படிக்கலாம் என்று அமைதியாகிவிட்டேன். ஒரு நடன நிகழ்ச்சியில் நூனப்போடே கிருஷ்ணமூர்த்தி என்பவர் எனது நடனத்தைப் பார்த்து, என்னை அழைத்துச் சென்று 'சம்சாரம்' என்னும் தெலுங்குப் படத்தில் நடிக்க வைத்தார்.

ஒரு வாரம் படப் பிடிப்பு இருந்தது . பின்னர் அவர்கள் எல்லோரும் நடிப்பு நன்றாக இல்லை, நடிக்கத் தெரியவில்லை என்று தங்களது அபிப்ராயத்தை கூறினார்கள். உண்மையைக் கூற வேண்டும் என்றால், எனக்கு அப்போது நிஜமாகவே நடிக்கத் தெரியாமல் இருந்திருக்கலாம். அவர்கள் கூறியது உண்மையாகக் கூட இருந்திருக்கலாம். காரணம், அப்போது எனக்கு நடிப்பு என்றால் என்னவென்றே தெரியாது. அந்தப்படம் எனக்கு புதிய அனுபவம் .

நான் நடனம் ஆடும் போதுக்கூட பெண்கள் பக்கம் நின்றுதான் நடனமாடிப் பழக்கம். அப்படி இருக்கையில் என்னைக் கொண்டுப்போய், அப்போது பெரிய ஹீரோவான நாகேஸ்வர ராவ் பக்கம் நிறுத்தி காதல் காட்சியில் நடிக்க வைத்தால் எப்படி? எனக்கு ஒன்றும் புரியவில்லை. பதற்றத்தில் எதுவுமே ஒழுங்காக வரவில்லை.





"பரவாயில்லை, உங்களுக்கு நடனக் காட்சித் தருகிறோம்" என்றார்கள். நடனத்தில் மட்டும் ஜெயிக்க வேண்டும் என்ற வைராக்கியம் என்னுள் பெருகியது. பாதாள பைரவி படத்தில் சின்ன நடனக்காட்சியில் ஆடினேன்.

அந்தப் படப்பிடிப்பில் என்னைப்பார்த்த கே. வி. ரெட்டி, "நடனம் ஆடும் பொழுது முகப்பாவனை நன்றாக இருக்கிறது. காட்சிகளை தூரத்தில் பதிவு செய்யும் போதே முகப்பாவனை நன்றாக இருக்கிறது. பர்சனாலிட்டிக் கூட நன்றாக இருக்கிறது. இன்னும் ஒரு இரண்டு வயது பெரிய பொண்ணா இருந்திருந்தால் நன்றாக இருக்கும். இப்போதே நல்ல நடிகையாகும் அறிகுறிகள் தெரிகிறது" என்றாராம்.

அதன் பின் தேவதாஸ் படத்தில் எனக்கு பார்வதி கதாபாத்திரத்தை கொடுப்பதற்கு நிறைய பேருக்கு உடன்பாடில்லை.

ஏனென்றால் நடனம் ஆடுவதைத் தவிர்த்து இவ்வளவு கனமான கதாபாத்திரத்தை என்னால் செய்ய முடியுமா என்று நினைத்தார்கள். அதே நேரத்தில் ''பெல்லி சேசி சூடு'' என்ற படத்தில் ஒரு கதாபாத்திரத்தில் நடித்திருந்தேன். அந்தப் படம் வெளியானதும், தயாரிப்பாளர் வேலு நாராயண ராவ், பெஜவாடா வந்து பார்த்து விட்டு கண்டிப்பாக சாவித்திரி சரியாக இருப்பார் என்றுக் கூறி, என்னை அந்தப் படத்தில் நடிப்பதற்கு ஒப்பந்தம் செய்தார்.

அவரை எல்லாரும் பயமுறுத்தினார்கள். பார்வதி கதாபாத்திரம், பெரிய கதாபாத்திரம். உன்னால் முடியுமா என்று என்னையும் பயமுறுத்தினார்கள். காரணம், அந்த கதாபாத்திரத்தை புரிந்துக்கொள்ளும் அளவிற்கு எனக்கு வயது இல்லை. எப்படியோ பெரியவர்கள் ஆசீர்வாதத்தாலும், சக நடிகர்கள் ஒத்துழைப்பாலும், நான் முன்னுக்கு வர வேண்டும் என நினைத்தவர்களாலும் தேவதாஸ் படத்தில் நன்றாக நடித்து நல்ல பெயர் எடுத்தேன்.

நான் நடித்தப் படத்தில் எந்த படம் பிடிக்கும் என்று என் ரசிகர்களிடம் கேட்டால், முதலில் தேவதாஸ் படத்தைதான் கூறுவார்கள். அதன் பின் தொங்க ராமுடு'' படம். அதில் காய்கறி விற்கும் பெண்ணாக நடித்தேன். அந்த படத்திலும்

திரையுலகில் இன்றளவும் சாவித்திரி என்றால், கதாநாயகர்களுக்கு நிகரான மரியாதை, இன்றும் மாறாமல் அப்படியே இருக்கிறது. அக்கால கட்டத்திலேயே கதாநாயகர்களுக்கு இணையாகக் கதாபாத்திரங்களை தேர்ந்தெடுத்து நடிக்கும் அளவிற்கு சாவித்திரியின் நிலை உச்சத்தில் இருந்தது.

1950 மற்றும் 60களில் தன் அழகு மற்றும் திறமையான நடிப்பால் ரசிகர்களைக் கட்டிப் போட்டவர் சாவித்திரி. ஒரே நேரத்தில் தமிழ், தெலுங்கு, மலையாளம் என பல மொழிகளில் நடித்து, சிறந்த நடிகையாக, நாயகர்களுக்கு இணையாக கோபுரக் கலசம் போல் மின்னியவர். நடிகையர் திலகம் என்று புகழ் பெற்ற ஒரே நடிகை இவர்.

திரையுலகத்தை ஆட்டிப் படைத்த பெரிய கதாநாயகர்களே சாவித்திரியை கதாநாயகியாக ஒப்பந்தம் செய்யுங்கள் என்று கேட்கும் அளவு அவரின் புகழ் எட்டுத் திக்கும் பறந்துக் கொண்டிருந்தது. அடுத்த 20 வருடங்கள் அவர் பிஸி நடிகையாகவே இருந்தார்.

தமிழ், தெலுங்கு, கன்னடம், இந்தி என 318 படங்களில் நடித்தார். அந்த உச்சத்தை அவர் தக்கவைத்துக் கொண்டாரா என்பதில்தான் விதியின் விபரீதமான விளையாட்டு இருந்தது.

அவரின் சினிமா வாழ்க்கையையும், தனிப்பட்ட வாழ்க்கையையும் திருப்பிப் போட்ட ஒரு திரைப்படம் ''மிஸ்ஸியம்மா''. படப்பிடிப்பு முடியும் தருவாயில் அப்படத்தின் கதாநாயகன் ஜெமினி கணேசன் மீது காதல். படம் முடிந்த பிறகு திருமணம்.

விதியின் விளையாட்டு ஆரம்பம் ஆனது. தோழிகள் சிலர் பேச்சைக் கேட்டு படம் இயக்கவும் தயாரக்கவும் தொடங்கியதால் தொடர் தோல்வி. இனி படம் இயக்க வேண்டாம் என்று கூறிய காதல் கணவர்




ஜெமினியுடன் மனக்கசப்பு. அடுத்தடுத்த படங்களின் தயாரிப்பில் சிக்கல் வர, தானே சொந்தமாக படங்களை தயாரித்தார். படங்கள் நன்றாக ஓடினாலும், அவர் நம்பியவர்கள் அவருக்கு துரோகம் செய்தனர். நஷ்டக் கணக்குக் காட்டினர்.

சொந்தங்கள் என நம்பியவர்கள் ஏமாற்றினார்கள். நண்பர்கள் என நினைத்தவர்கள் துரோகம் இழைத்தார்கள். தொடர் தோல்வி, குடும்ப வாழ்வில் பிளவு, பிள்ளைகளின் எதிர்காலம் குறித்த கவலை அனைத்தும் சாவித்திரியை மதுவின் பிடியில் தள்ளியது.

பின்னர், பிள்ளைகளின் எதிர்காலம் கருதி, போதையின் பிடியில் இருந்து கொஞ்சம் சுதாரித்து, மீண்டும் சினிமாவில் நடிக்க தொடங்கினார். திரையுலகின் ஜாம்பவான்கள் அவரது கால்ஷீட்டுக்காக காத்திருந்த காலம் போய், சிறு சிறு வேடங்களில் நடிக்க வேண்டிய கட்டாயத்துக்கு தள்ளப்பட்டார். நீரிழிவு நோயின் தாக்கம் அதிகமாகியது.

படப்பிடிப்பிற்காக மகனுடன் மைசூர் சென்ற சாவித்திரி, சர்க்கரை நோய் பாதிப்பால் 'நிம்மதி' தேட, மயக்கமாகி கோமாவுக்கு போனார். கோமாவிலிருந்து மீளாமேலேயே தனது இன்னுடலை விட்டுப் பிரிந்து விண்ணுலகம் சென்றார்.

*அந்த கதாபாத்திரத்தில் நடிக்க முடியுமா என்று நினைத்தேன். அதிலும் என்னை அனைவரும் தட்டிக்கொடுத்து நடிக்க கற்றுக் கொடுத்தனர். அந்தப் படக் கதாபாத்திரம் எனக்கும் மிகவும் பிடிக்கும். அந்தப் படத்திலும் ரசிகர்களின் ஆசீர்வாதம் கிடைத்தது .*

*படப்பிடிப்பில் நான் எப்போதுமேஸ்டுடியோவில் இருக்கும் மரத்தின் மேல் ஏறி அமர்ந்திருப்பேன். நான் வயதில் சிறியவள் என்பதால் யாரும் என்னிடம் கடுமையாக பேச மாட்டார்கள். "இந்தப் பொண்ணு சினிமாவில் வளர்ந்துட்டே இருக்கு. வருங்காலத்தில் பெரிய ஸ்டார் ஆகப்போகுது. ஆனாலும், மரத்துல ஏறி கொய்யாக்கா பறிச்சுட்டு இருக்கே" என்று கேலி செய்வார்கள்.*

*சினிமாவோடு தமிழ் நாடகங்களிலும் நடிக்கத் தொடங்கிருக்கிறேன். சினிமாவிற்கும் நாடகத்திற்கும் என்ன வித்தியாசம் என்றால், சினிமாவை 5 அல்லது 6 மாதம் படம் எடுத்து, வெளியிட்டு பின் அது வெற்றி பெற்றதா இல்லையா என்ற முடிவிற்காக காத்திருக்க வேண்டும்.*

*நாடகத்தில் நடிக்கும் போது அப்படி இல்லை. மேடையில் நமது நடிப்பு பிடித்திருந்தால் அப்போதே பாராட்டுக்களை கைதட்டலாக வெளிப்படுத்துவார்கள். அதில் நமக்கு ஒரு திருப்தி. நாடகத்தில் ரிசல்ட் என்னவென்று உடனே தெரிந்துவிடும், சினிமா என்றால் காத்திருக்க வேண்டும். எல்லோரும் நாடகம் கஷ்டம், சினிமா ஈஸி என்கின்றனர். ஆனால், எனக்கென்னவோ*



> **“சாவித்திரியின் வாழ்க்கை வரலாறு’’**
>
> **தெலுங்கில் ‘‘யவடே சுப்ரமண்யம் ’’ என்ற படத்தை இயக்கிய இயக்குநர் நாக் அஸ்வின் அவர்கள் நடிகை சாவித்திரியின் வாழ்க்கை வரலாற்றை படமாக்கியுள்ளார். தமிழில் நடிகையர் திலகம் எனவும் தெலுங்கில் மகாநடி எனவும் படமாக்கியுள்ளனர்.**
>
> **சாவித்திரியாக கீர்த்தி சுரேசும், ஜெமினி கணேசனாக துல்கரும் நடித்துள்ள இந்தப் படம், வெற்றிகரமாக ஓடிக் கொண்டிருக்கிறது.**

நாடகம்தான் சிரமம் இல்லாமல் இருக்கும்.

சினிமாவில் நடிக்கும்போது ஒரு காட்சியின் தொடர்ச்சி, 10, 15 நாள் கழித்து வைக்கும் போது நாம் பேசும் வசனங்களில் இருந்து குரல் தொனியிலிருந்து காஸ்டியூம் வரை அதன் தொடர்ச்சியாக இருக்க வேண்டும். தொடர்ச்சியின் முன் எப்படி நடித்தோமோ’ அதே பாணியில் ஞாபகம் வைத்து தொடர வேண்டும்.

மற்றொரு விஷயத்தைக்கூட இந்த நேரத்தில் நான் கூற விரும்புகிறேன் நடிகர், நடிகையர்களுக்கு கூட சில பொறுப்பு உண்டு.

நீங்கள் நடித்தப் படத்தில் உங்களுக்கு பிடித்த கதாபாத்திரம் என்னவென்றுநிறையப் பேர் கேட்கிறார்கள். அதற்கு என் பதில் என்னவென்றால், எங்கள் வீட்டு மஹாலட்சுமியில் சுசிலா கதாபாத்திரம், திருட்டு ராமன் படத்தில் சீதா கதாபாத்திரம், பெண்ணின் பெருமை படத்தில் பத்மா. ப்ராப்தம், குமுதம், பாசமலர் இன்னும் நிறைய சொல்லலாம்.

அதிலும் தெலுங்கில், அண்ணன், தங்கை பாசத்தை பிரதிபலிக்கும் “ரத்த சம்பந்தம்“ படத்தில் நடித்தேன். இந்தப் படம் முதன் முதலில் தமிழில் நானும் சிவாஜி கணேசனும் நடித்தோம். அந்தப்படத்தில் ஒரு சீன் வரும் அண்ணன் அண்ணி எல்லோரும் விட்டுவிட்டு போகும் போது, “எல்லோரும் விட்டுவிட்டு போகிறீர்களே” என்று அழும் காட்சி அது. அதில் நான் நிஜமாகவே அழுதுவிட்டேன்.

அப்போது செட்டில் இருந்த அனைவரும் எனக்கு அறிவுரைக்கூற ஆரம்பித்து விட்டார்கள். இது நடிப்பு மட்டும்தான் என்பதை நினைவில் கொண்டு நடிக்க வேண்டுமே ஒழிய அதிலேயே ஒன்றி விடக்கூடாது.

அதிலும் நீங்கள் பலமான கதாபாத்திரங்களில் நடிப்பவர். காலையில் இருந்து இரவுவரை ஸ்ட்ராங்கான கதாபாத்திரங்களில் நடிக்கும் போது, உங்களை நீங்கள் கட்டுப்பாட்டில் வைத்துக் கொள்ள வேண்டும். இல்லையென்றால், இப்படி உணர்ச்சிவசப்படும்போது உங்களது நரம்புகள் பாதிக்கும் என்று அறிவுரை கூறினார்கள்.

மாயா பஜார் படத்தில் நடிக்கும் போது மாயா சசிரேகா என்ற கேரக்டரில் நடிக்கும் போது துறு துறுவென இருக்க வேண்டும். ரங்கா ராவ் எப்படி நடக்கிறார், நிற்கிறார், அவரின் மேனாரிசங்கள் எப்படி என்பதை பார்த்துக் கொண்டே இருப்பேன்.

படப்பிடிப்பின் போது “கதை”யை என் கையில் கொடுத்ததும், நான் ரங்காராவ் அவர்களாகவே மாறிவிடுவேன். இதை எல்லோரும் பாராட்டினார்கள்” என்றவர், “உங்களுடன் இன்னும் நிறைய அனுபவங்களைப் பகிர்ந்துக் கொள்ள ஆசையாகத் தான் இருக்கிறது. ஆனால், நேரம் இல்லை. மீண்டும் நேரம் கிடைக்கும் போது உங்களைச் சந்திக்கிறேன். ஜெய்ஹிந்த் என்று கூறி நீண்ட நேரப் பேட்டியை முடித்துக் கொண்டார்.

ஆனால், பேட்டி எடுத்தவர்களுக்கும் தெரியாது, அந்தப் பேட்டியை கேட்டவர்களுக்கும் தெரியாது. அடுத்த ஓராண்டு இடைவெளியிலேயே அவர் நம்மை விட்டு விண்ணுலகம் சென்று விடுவார் என்று..... ஆம்... 1981 ம் ஆண்டு டிசம்பர் மாதம் 26ம் தேதி அவர் இந்த பூவுலகை விட்டு மறைந்தார்.

> **சர்ச்சை**
>
> **நடிகையர் திலகம் படம் குறித்து சில சர்ச்சைகளும் எழுந்துள்ளன. இது குறித்து ஜெமினி கணேசன் அவர்களின் மகளான கமலா செல்வராஜ், “இந்த படத்தில் சாவித்திரியை மட்டும் முன்னிலைப்படுத்தியும், எனது தந்தையை எதிர்மறையாகவும் காண்பித்திருக்கிறார்கள். எனது தந்தையான ஜெமினி கணேஷன் அவர்கள் எப்போதும் சாவித்ரியின் பின்னால் நடப்பது போலவும் காண்பித்திருக்கின்றனர்.**
>
> **ஜெமினி கணேசன் அவர்கள் சாவித்திரி அவர்களுக்கு திடீரென தாலிக் கட்டியதாகவும், சாவித்திரி அவர்களுக்கு நிறைய பட வாய்ப்புகள் கிடைத்ததாகவும் இதனால் இருவருக்கு பிரச்சனை வந்ததாகவும் தெரிவித்துள்ளனர்.**
>
> **ஜெமினி கணேசன், சாவித்திரிக்கு குடிக்க கற்றுக் கொடுத்ததால் குடிக்கு அடிமையாகிய சாவித்திரி அவர்களுக்கு சர்க்கரை நோய் வந்து கோமாவில் இறந்து விட்டார் என்று காண்பித்துள்ளனர்.**
>
> **அப்பா எந்தப் பெண்ணுக்கும் ஊறு விளைவித்ததே கிடையாது. தன்னை விரும்பி வரும் பெண்களை மட்டுமே அவர் திருமணம் செய்துள்ளார்’’ என்று கூறினார்.**

# வில்லன்கள்... நிஜ வாழ்க்கையில் ஹீரோ

- இயக்குநர் ஜான் மகேந்திரன்

**அந்த காலம் முதல் இந்த காலம் வரை, திரையில் வில்லனாக வலம் வந்தவர்கள் பலர். ஆனால் அவர்கள், நிஜ வாழ்கையில் ஹீரோக்களாக இருக்கிறார்கள்.**

எம்.ஜி.ஆரின் பல படங்களில், வில்லனாக நடித்தவர் நம்பியார். நம்பியார் சாமி என்று எல்லோராலும் அன்புடன் அழைக்கப்பட்டவர். அவர் நடித்த படங்களில் கொடூரமான மனிதராகவும், பல கெட்ட பழக்க வழக்கங்கள் உள்ள மனிதராகவும், பலரின் வாழ்வை கெடுக்கும் பாத்திரமாக அவர் நடித்தாலும், நிஜ வாழ்கையில் எந்தவித கெட்ட பழக்கங்கள் இல்லாமல், ஐயப்ப பக்தராக வாழ்ந்தவர்.

இவரை நான் சந்தித்தது கிடையாது. ஆனால், சமீபத்தில் இவரை போல் ஒரு வில்லனை சந்திக்க நேர்ந்தது. அவர் அஷுடோஷ் ரானா.

அஷுடோஷ் ராணா, ஹிந்தி, தெலுங்கு, தமிழ் படங்களில் மிக பிரபலமான நடிகர். வில்லன் வேடம் மட்டுமின்றி பல குணசித்திர கதாபாத்திரமும் ஏற்று நடித்து கொண்டிருப்பவர், அவருடன் நான் பணியாற்றிய படம் மொட்ட சிவா கெட்ட சிவா.

அன்று அவருடைய அறிமுக காட்சி. படப்பிடிப்பு நடப்பது ஐதராபாத்தில். அங்கு மொத்த யூனிட்டும் தங்கும் செலவை, மனதில் வைத்து கொள்ளுங்கள். படத்தில் தன்னுடைய தம்பியை அரசியல் வாரிசாக தன் கட்சி தொண்டர்களுக்கு அறிமுகம் செய்யும் காட்சி. சுமார் ஐநூறு ஜூனியர் ஆர்டிஸ்ட் மற்றும் அவருடன் நடிக்கும் முக்கிய நடிகர்கள் கலந்து கொள்ளும் காட்சி. ஒளிப்பதிவாளர் சர்வேஷ் அந்த குறிப்பிட்ட காட்சிக்காக பெரிய பெரிய கிரேன் வரவழைத்து இருந்தார். காட்சியின் பிரமாண்டத்திற்கு ஏகப்பட்ட செட் ப்ராபர்டீஸ் ஏற்பாடு செய்திருந்தார்.

அதிகாலை நேரம் மொத்த யூனிட்டும் படப்பிடிப்பு தளத்தில் வந்து இறங்கி கொண்டிருக்க, அந்த செய்தியும் வந்தது.

அஷுடோஷ் ராணாவின் தந்தை மரணம்.

ராஜஸ்தானில் அஷுடோஷ் ராணாவின் தந்தை இறந்த செய்தியை ராணாவின் உதவியாளர் கூற, எங்கள் எல்லோருக்கும், துக்க செய்தியை மீறிய அதிர்ச்சி.

மொத்த யூனிட்டும் வந்து இறங்கியாகிவிட்டது. இனி படப்பிடிப்பை ரத்து செய்தால் பல லட்சங்கள்









விரயமாகும். தந்தையை பார்க்க கிளம்பி போகும் ராணா, மறுபடியும் நிச்சயம் இரண்டு மூன்று நாட்கள் கழித்தே வருவார். அதுவரை எடுக்க வேறு காட்சிகள் இல்லை. மொத்த யூனிட்டும் வேலை செய்யாமல் காத்திருக்க வேண்டும், இந்த செலவு பல லட்சங்களை தாண்டும்.

ராஜஸ்தான் செல்ல இருக்கும் அன்றைய விமான தகவல்களை புரொடக்ஷன் மேனேஜர் டிராவல்சுக்கு போன் செய்து விசாரித்து கொண்டிருக்க, ராணாவிடம் இருந்து போன் கால்.

“திட்டமிட்டபடி இன்றைய காட்சியை முடித்து கொடுத்து விட்டு கிளம்புகிறேன், இதைத்தான் என் தந்தையும் விரும்பி இருப்பார் “ என்று கூறி சற்று நேரத்தில் படப்பிடிப்பு தளத்திற்கு வந்திறங்கினார்.

சாதாரணமாக ஒரு சிறிய காட்சி, அதில் வெறும் இரண்டு பேர் நடித்தாலே படப்பிடிப்பு தளத்தில் ஏக சத்தம் இருக்கும் பட்சத்தில், அன்றைய படப்பிடிப்பு மிக அமைதியாக நடந்தது.

அஷுடோஷ் ராணாவின் மன நிலையை புரிந்து கொண்டு, மொத்த யூனிட்டும் மிக அமைதியாக வேலை செய்தது. அன்று அது யூனிட்டாக தெரியவில்லை, மாறாக ஒரே குடும்பமாக தெரிந்தது.

அன்று மாலை காட்சி முடிந்ததும், இயக்குனரிடமும், ஒளிப்பதிவாளரிடமும் திட்டமிட்ட எல்லா காட்சிகளும் எடுக்கப்பட்டதா என்று கேட்டு தெரிந்த பின்பே, அஷுடோஷ் ராணா கிளம்பி சென்றார், கடைசியாக தன் தந்தையை காண....

அவர் நினைத்திருந்தால் கிளம்பி போயி இருக்கலாம், அந்த சூழலில் யாரும் எதுவும் சொல்லி இருக்க முடியாது. ஆனால், தன்னால் எந்த விதத்திலும் நஷ்டம் வந்து விட கூடாது என்பதில் அக்கறையுடன் இருந்தார் அஷுடோஷ் ராணா என்கிற வில்லன்.

இதே திரைப்படத்துறையில் சில குழந்தைத்தனமான நடிகர்களும் இருக்கிறார்கள். மணிரத்தினம் சாரின் பம்பாய் படப்பிடிப்பு, பொள்ளாச்சியில். அன்று தான் மொத்த யூனிட்டும் போய் சக்தி லாட்ஜில் இறங்குகிறோம். எங்கள் எல்லோருக்கும் மேனேஜர் மோகன், ஹோட்டல் அறை ஏற்பாடு செய்து கொண்டிருந்தார்.

ஒவ்வொரு நபருக்கும் அவரின் அறை எண் கூறியபடி, அந்த அறையின் சாவியை கொடுத்தபடி இருந்தார்.

என்னிடமும் ஒரு அறையின் சாவியை, என் அருகில் இருந்த ஒரு நடிகரை பார்த்து “ சார் நீங்க ஜான் சார் ரூம்ல தங்கிக்கோங்க “ என்றார். இதை கேட்ட மாத்திரத்தில் அவர் முகம் மாறியது.

இத்தனைக்கும் அவர் பெரிய நடிகர் கூட இல்லை, நிறைய டிராமா செய்திருக்கிறார், ஒரு சில படங்களில் தலையை காட்டி இருக்கிறார், பம்பாய் படத்தில் மிக சிறிய வேடம்.

என் ரூமில் அவரை மேனேஜர் தங்க சொன்னதும் அவருக்கு கோபம் தலைக்கேறியது.

“ஏன் சார் நான் எத்தனை டிராமால நடிச்சிருக்கேன், எத்தனை வருஷ சர்வீஸ்... நான் எதுக்கு சார் அவர் ரூம்ல அட்ஜஸ்ட் பண்ணிக்கணும்?” இதை அவர் சொல்லி முடிக்கும் முன், மேனேஜர் என் கையிலிருந்த ரூம் சாவியை வாங்கி, அந்த நடிகரின் கையில் கொடுத்து, என்னை பார்த்து “ ஜான் சார் நீங்க இவர் ரூம்ல தங்கிக்கோங்க” என்றார்.

அடுத்த ஒரு மாத படப்பிடிப்பிற்கு நாங்கள் இருவரும் ஒரே அறையில் தங்கினோம். அவரை பார்க்கும்





போதெல்லாம் எனக்கு சிரிப்பு வரும். ஜான் அறையில் நான் தங்கவில்லை, என் அறையில்தான் ஜான் தங்கி இருக்கிறார்... அடடா அவர் ஈகோவிற்கு வந்தனம்.

சாசனம் திரைப்படம். இயக்குனர் மகேந்திரன் இயக்கத்தில் NFDC தயாரிப்பில் உருவான படம். அப்பா (இயக்குனர் மகேந்திரன் ), சாசனம் கதையை கொடுத்து, அது ஒப்புதல் வழங்கப்பட்டு, NFDC தயாரிப்பை தொடங்க ஐந்து வருடங்கள் ஆகியது. இதற்கிடையில் அப்பா படம் எடுக்க கொடுத்த பட்ஜெட் , அந்த ஐந்து வருடங்களில் பல மடங்கு பெருகியது. ஆனால் NFDC பிடிவாதமாக ஐந்து வருடத்துக்கு முன்னால் கொடுத்த பட்ஜெட்டில் நின்றது.

இவ்வுளவு குறுகிய பட்ஜெட்டில் அப்பா மிகவும் சிரமப்பட்டு படத்தை எடுத்து கொண்டிருந்தார். படப்பிடிப்பு முழுக்க, காரைக்குடியிலும் அதைச்சுற்றி உள்ள ஊர்களில் நடந்தது.

அப்பா படும் சிரமத்தை பார்த்து, படத்தின் நாயகன் அரவிந்த்சாமி, ஒருநாள் அப்பாவிடம் வந்து “சார்... எனக்கு இந்த படத்துல ஒரு பைசா கூட சம்பளம் வேண்டாம்...என் சம்பளத்தையும் படத்துக்கு யூஸ் பண்ணுங்க “ என்றார்.

இது அரவிந்த்சாமி, இயக்குனர் மகேந்திரன் மேல் வைத்திருந்த அபிமானம் மட்டும் அல்ல. சாசனம் கதை மேல் அவருக்கு இருந்த ஈடுபாடும் காரணம்.

சாசனம் கதை, குடும்ப சூழ்நிலையால் தத்து கொடுக்கப்பட்ட ஒருவனின் வாழ்க்கை பற்றியது. அரவிந்த்சாமியும் நிஜ வாழ்க்கையில் தத்து கொடுக்கப்பட்டு வளர்ந்தவர் தான்.



நானா பட்டேக்கர், மிக சிறந்த குணச்சித்திர நடிகர், எப்பேர்பட்ட கதாபாத்திரமாக இருந்தாலும் தன் முத்திரையை பதிப்பவர். கதாநாயகனாகவோ, வில்லனாகவோ, வேறு கதாபாத்திரமாகவோ இருந்தாலும், ஒரு படத்தில் அவர் இருக்கிறார் என்றால், அந்த படத்தை காண அவருக்கென்று ஒரு மிக பெரிய ரசிகர் பட்டாளம் இருக்கிறது. பரிந்தா, அக்னிசாக்ஷி, ஷக்தி, அப் தக் சப்பான், அபஹரன், தமிழில் பாரதிராஜா இயக்கத்தில் பொம்மலாட்டம் இவை அனைத்தும் இவர் நடிப்பில் மைல் கல்.

குறிப்பாக, பரிந்தாவில் அவர் நடித்த சைக்கோ கதாபாத்திரம் பெரிதும் பாராட்டப்பட்டது. அக்னிசாக்ஷியில் அவர் மனைவியாக நடித்த மனிஷா கொய்ராலாவிடம் இவர் காட்டிய சாடிஸம் பிரமிக்க வைத்தது. ஷக்தி படத்தில் இவர் ஏற்ற கொடூரமான கதாபாத்திரம் நிஜ வாழ்க்கையிலும் இவர் மேல் பயத்தை ஏற்படுத்தியது.

ஒருமுறை சிறந்த நடிகருக்கான பிலிம்பேர் விருது இவருக்கு வழங்கப்பட்டது. இவரை பேட்டி எடுக்க சென்ற பிலிம்பேர் நிருபருக்கு, தன் வீட்டின் கக்கூசை கழுவியபடியே பேட்டி கொடுத்தார். பேட்டியின் முடிவில் நிருபர் “ என்ன சார் ? எவ்வுளவு பெரிய நடிகர் நீங்க... நீங்க போய் கக்கூஸ் கழுவுறீங்க?” என்றார்

அதற்கு நானா “என் வீட்டு கக்குச நான் தான் கழுவுவேன். நீங்களா கழுவுவீங்க? இல்ல உங்க எடிட்டர் கழுவுவாரா? “ என்றார்.

இந்த நானா பட்டேக்கர், சில வருடங்களுக்கு முன்பு ஒரு அறிவிப்பு செய்தார். மொத்த இந்தியாவும் இவரை பற்றி பேசியது. தினம் தினம் இந்தியாவின் பல கிராமங்களில் பல ஆயிரம் விவசாயிகள் வறுமையின் காரணமாக தற்கொலை செய்து கொள்ளும் செய்தி வந்த வண்ணம் இருந்த நேரம்.

அப்போது நானா “வறுமையின் காரணமாக தற்கொலை முடிவு எடுக்கும் எந்தவொரு விவசாயியும் ஒருமுறை என்னை சந்திக்கவும். நான் உங்களுக்கு உதவுகிறேன். இந்த குறிப்பிட்ட தொலைபேசி எண்ணில் என்னை அழைக்கவும், நான் உடனடியாக உதவி செய்கிறேன் “ என்று அறிவித்தார். அரசியலுக்கு வரும் எண்ணம் இவருக்கில்லை என்பதை இங்கே சொல்லிக்கொள்ள ஆசைப்படுகிறேன்.

அதேபோல் நம்மூர் பிரகாஷ்ராஜை எடுத்து கொள்ளுங்கள். தமிழ் தொடங்கி, தெலுங்கு, மலையாளம், கன்னடம், ஹிந்தி படங்கள் வரை நடித்து கொண்டிருக்கும் மிக சிறந்த நடிகர். பல கதாபாத்திரங்கள் செய்தாலும், அவர் வில்லனாக நடிக்கும் கதாபாத்திரங்கள் அவருக்கு பெரும் பெயரை சம்பாதித்து கொடுத்தது.

குறிப்பாக கில்லி படத்தில் திரிஷாவை பார்த்து, அவர் படம் நெடுக 'செல்லம் செல்லம்" என்று அழைத்தது இன்றுவரை ரசிக்கப்படுகிறது.

இந்த இடத்தில் அவர், என்னிடம் இதை பற்றி மனம் விட்டு பேசியதை கூற வேண்டும். வீட்டில் அவர், மகனை தான் பிரகாஷ்ராஜ் செல்லம் செல்லம் என்று அழைத்து கொண்டிருப்பார், அதை தான் அவர் கில்லி படத்தில் செய்தார். அந்த மகன் எதிர்பாராத விதமாக இறந்து விட்டார். இன்றும் திரைப்பட விழாக்களில் இவரை காணும் ரசிகர்கள், செல்லம் செல்லம் என்று அழைத்து சந்தோஷப்படுவார்கள். ஆனால், அவர்கள் அப்படி அழைக்கும் போது பிரகாஷ்ராஜுக்கு இறந்த அவர் மகனை ஞாபகம் படுத்துகிறார்கள் என்பது அவர்களுக்கு தெரிய வாய்ப்பில்லை. தன் சக்தியை பயன்படுத்தி, சிறு கிராமங்களை உருவாக்கி வருகிறார் நடிகர் பிரகாஷ்ராஜ். அண்மையில் பிரகாஷ் ராஜ் பவுண்டேஷன் எனும் அறக்கட்டளையை துவங்கியுள்ளார்.

இந்நிலையில் அவர் தெலங்கானா மாநிலம் மஹபூப்நகர் மாவட்டத்தில் உள்ள கொண்டாரெட்டிபள்ளி கிராமத்தை தத்தெடுக்க விரும்புவதாக மாநில பஞ்சாயத்து ராஜ் மற்றும் தகவல் தொழில்நுட்பத் துறை அமைச்சர் கே.தாரகராமா ராவிடம் தெரிவித்துள்ளார். பிரகாஷ்ராஜின் இந்த முடிவை அமைச்சர் ராவ் பாராட்டியுள்ளார். மஹபூப்நகர் மாவட்டம் மிகவும் பின்தங்கியது என்பது குறிப்பிடத்தக்கது.



கொண்டாரெட்டிபள்ளி கிராமத்தில் அதிநவீன தொழில்நுட்பங்களை பயன்படுத்தி விவசாயம் செய்ய திட்டமிட்டுள்ளதாக பிரகாஷ்ராஜ், அமைச்சரிடம் தெரிவித்துள்ளார். பிரகாஷ்ராஜ், அரசுடன் சேர்ந்து விவசாயிகளுக்கு உதவி செய்ய உள்ளார். அந்த கிராமத்தில் அவர் அடிப்படை வசதிகளை அமைத்து கொடுக்க உள்ளார் என்று அரசு தரப்பில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

ரம்ஜான் தினத்தன்று, ஒரு முஸ்லிம் குடும்பத்துக்கு புதிய வீட்டை கட்டி அன்பளிப்பாக கொடுத்துள்ளார். சோட்டே மியான் என்பவர். மனைவி மூன்று மகளுடன், இடிந்த வீட்டில் வசித்து வந்ததை பார்த்து, தனது அறகட்டளை மூலம் இந்த நல்ல காரியத்தை செய்துள்ளார் பிரகாஷ்ராஜ்.

கட்சி தொடங்கிதான் உதவி செய்ய வேண்டும் என்ற அவசியம் இல்லை. எதையும் எதிர்பார்க்காமல் உதவி செய்கிற மனம் இருந்தால் போதும். திரைப்படத்தில் வில்லனாக நடிப்பவர், நிஜ வாழ்க்கையில் வில்லனாக இருப்பதில்லை. திரைப்படத்தில் ஹீரோவாக நடிப்பவர், நிஜ வாழ்க்கையிலும் ஹீரோவாக இருப்பார் என்று நிச்சயமும் இல்லை.

●





செந்தமிழ் இருக்கை
செய்வோம்

வட அமெ
மெட்ரோப்ளெ

பேரவைத்

JUNE

Dr Pepper

## JUNE 29

# TEF TALK

### தமிழ் தொழில் முனைவோர் கருத்தரங்கம்



**Ms Madhu Saran**
Global Ambassador for Women Entrepreneurship Day, UN



**Mr Karthikeyan Balasubramanian**
Executive Director, Thriveni Earth Movers



**Mr Premanand Sethurajan**
Academician, Founder, LMES Academy



**Ms Kanchana Raman**
CEO, Avion Systems



**Dr Ishari Ganesh**
Founder, Vels University



**Mr Sundaram Ramaswamy**
Founder & Managing Director, Aerospace Engineers



**Mr Arul Murugan**
CEO, 11-11 Ventures



**Mr Chidambaram Lakshmanan**
President, Strategic Verticals, Tech Mahindra



**Ms Saranya Babu**
VP, Instapage

மேலும் 15 தமிழ்
தொழில் முனைவோர்கள்

**அனுமதிக் கட்டணம் - 75$ மட்டுமே!!!**
(காலை & மதிய உணவு உட்பட)

## TEF TALK Community Partners






தில்லையாடி வள்ளியம்மை
120 ஆம் பிறந்த ஆண்டு விழா

### ஹார்வர்ட் தமிழ் இருக்கை



மாண்புமிகு
மு.க. ஸ்டாலின் MLA



மாண்புமிகு
கே. பாண்டியராஜன் MLA



திரு. பால் பாண்டியன்



Dr. விஜய் ஜானகிராமன்



Dr. சுந்தரேசன்
சம்பந்தம்

### கவியரங்கம்



கவிஞர் ஈரோடு
தமிழன்பன்

### கருத்துக்களம்



வழக்கறிஞர்
அருள்மொழி

### சிறப்புப் பேச்சாளர்கள்



கலியமூர்த்தி IPS



உதயச்சந்திரன் IAS



பேரா. உல்ரிக் நிக்க

### சின்னத்திரைக் குழுமம்



நடிகர்
மா.க.ப ஆனந்த்



நடிகை ஆலியா மனசா



நடிகை ரச்சிதா



நடிகர் சஞ்சீவ்

### மெல்லிசை விரு



இசையமைப்பாளர்
ஜி.வி. பிரகாஷ்

### தமிழிசை



சஞ்சய் சுப்பிரமணியன்



நெய்வேலி பலராமன்



வரதராஜன் சந்தானம்

### இசைக்கதம்பம்



கோபாலகிருஷ்ணன்



திரிலோகசுந்தர்

### திருமூலர் மூச்சுப் பயிற்சி

திரு. சுந்தர் சுப்ரமணியன்



**நாள் 2&3 அனுமதிக் க**

(முன்பதிவு மற்றும் அனைத்து விவரங்க

## Texas Supporting Organizations





செம்மொழி சிறக்கச்
செய்வோம்.

தமிழின்
உயிர் தொல்காப்பியம்



தமிழனின்
உயிர் திருக்குறள்

ரிக்கத் தமிழ்ச்சங்கப் பேரவை மற்றும்
க்ஸ் தமிழ்ச்சங்கம் இணைந்து வழங்கும்

# த் தமிழ்விழா – 2018

**29, 30 & JULY 1, 2018**

r Arena, City of Frisco, Dallas, TX

ஈழத்தந்தை செல்வா
120 ஆம் பிறந்த ஆண்டு விழா

## கீழடி அகழ்வாய்வு


அமர்நாத் ராமகிருஷ்ணன்
தொல்லியலாளர்


சு. வெங்கடேசன்
எழுத்தாளர்

## உலகத்தமிழ் நேரம்


Dr. பிரான்சிஸ் ஹாரிசன்


ஆழி செந்தில்நாதன்


கர்கா சேட்டர்ஜி


லஸ்


முனைவர் ஞான சம்பந்தன்
பேராசிரியர்


முனைவர் மருதநாயகம்
தமிழ் அறிஞர்


மம்மது
தமிழிசை ஆய்வாளர்


கவிஞர் அறிவுமதி


முனைவர் சுபாஷினி

## திரைக் கலைஞர்கள்


நடிகர்
கார்த்திக் சிவகுமார்

நடிகை
அதித் பாலன்

## ந்து



கலைமாமணி
டிரம்ஸ் சிவமணி


பாடகர் கார்த்திக்


இசையமைப்பாளர்
ஹிப் ஹாப் தமிழா ஆதி


பாடகி சைந்தவி


பாடகி சக்திஸ்ரீ

## பேரவை சிறப்பு நடனம்


கலைமாமணி
நர்த்தகி நட்ராஜ்

திருமிகு சக்தி பாஸ்கர்

## வயலின்


புஷ்பானந்தம்


நாகரத்தினம்


Dr. பத்மா கிருஷ்ணன்

## நலம் வாழ.. தமிழ் மருத்துவம்


பேரா. ரவீந்திரன் கண்ணன்


முனைவர் ஷண்முகமூர்த்தி
லக்ஷ்மணன்


செல்வராஜ்


Dr. ஸ்ரீனிவாசன்

கட்டணம் - **25$**
மட்டுமே!!!

ளுக்கும், www.fetnaconvention.org)

## Our Sponsors




Coppell Tamil Learning Center

Plano Tamil School

BalaDatta Tamizh Palli

அவ்வை தமிழ் மையம்

## மரபு நிகழ்ச்சிகள்

நாட்டுப்புறப் பாடல்கள், பறை,
பம்பை, சிலம்பம், கும்மி


சுகந்தி


ஆக்காட்டி ஆறுமுகம்


அந்தோணிதாசன்


ஆண்டவன்


சிலம்பம் சந்தியா


சிலம்பம் சூர்யா


'முரசு கலைக்குழு'
பறை அருள்செல்வி


'முரசு கலைக்குழு'
பறை ஆனந்த்

## நாடகங்கள்

மணல்மகுடி நாடக நிலம் வழங்கும்

'பூழிப்பாவை'



இயக்குநர்
முருகபூபதி சண்முகம்

## ஓவியப் பட்டறை


டிராட்ஸ்கி மருது


இளையராஜா

## விழா மரபு சிறப்பு விருந்து

- ✓ பேரவைத் தமிழர்கள், சிறப்பு அழைப்பாளர்கள், கொடையாளர்கள் சிறப்பு விருந்து.
- ✓ பெண் நெசவாளிகளைப்(கைத்தறி) பெருமைப்படுத்தும் ஆடை அணிவகுப்பு
- ✓ விழாச்சிறப்பு விருந்தினர்கள் சந்திப்பு & கலந்துரையாடல்

MEDIA PARTNERS →

8K Radio TAMIL
Miles Kammi, Smiles Jaasthi!

India Abroad

8K தமிழ் எக்ஸ்பிரஸ்
வட அமெரிக்கத் தமிழர்களின் குரல்!

# வட அமெரிக்காவில் ரஜினி மக்கள் மன்றம்




- நவநீதின் / ஸ்ரீதரன்

**ரஜினிகாந்த், "அரசியலுக்கு வருவேன்" என்று அறிவித்ததை அடுத்து, கடந்த புத்தாண்டு அன்று "ரஜினி மக்கள் மன்றம்" என்ற அமைப்பை தொடங்கினார்.**

அரசியல் அறிவிப்புக்கு பின்பு தொடர்ச்சியாக தமிழகத்தில் மட்டுமல்லாமல், உ லகம் முழுவதும் மக்கள் மன்ற நிர்வாகிகளை நியமித்து வருகிறார். அந்த வகையில் வட அமெரிக்காவிலும் நிர்வாகிகளை ரஜினிகாந்த் நியமித்துள்ளார். இதையடுத்து, வட அமெரிக்காவில் ரஜினி மக்கள் மன்றம் முறைப்படி தொடங்கப்பட்டது.

வட அமெரிக்காவின் ரஜினி மக்கள் மன்றம், ரஜினியின் குரலில் பதிவு செய்து அனுப்பிய வாழ்த்துக்களுடன் இனிதே தொடங்கியது. மன்ற செயலாளர் நாராயணன் வரவேற்புரை வழங்கினார்.

தலைவர் ரஜினிகாந்தை சந்தித்தது பற்றியும், அவரது வழிகாட்டல் மற்றும் ஆசிகளுடன் மக்கள் மன்றம் நிறுவப்பட்டதைப் பற்றியும், தலைவருடன் பகிர்ந்துகொண்ட செயல் திட்டங்கள் பற்றியும் பேசினார்.



படையப்பாவின் "வெற்றி கொடிக்கட்டு" பாடல் முழங்க, மகளிர் அணி உறுப்பினர்களும், வட அமெரிக்கா செயலாளர் நாராயணன், இணைச் செயலாளர்கள் ரமேஷ்குமார், கோபால் ஸ்ரீனிவாசன் மற்றும் இணை செயலாளர் நவநீதன் ஆகியோர் குத்துவிளக்கு ஏற்றி வைத்து விழாவை உற்சாகமாக ஆரம்பித்தனர்.

கனடாவின் துணைச் செயலாளர் தீபா மோகன், மாவட்ட ஒருங்கிணைப்புச் செயலாளர் கல்யாணராமன், தொழில்நுட்ப செயலாளர் சம்பத், மகளிர் அணி செயலாளர் சுகந்தி ஆகியோர் மற்றும் அமெரிக்காவின் மாவட்ட செயலாளர்கள் அறிமுகப்படுத்தப்பட்டனர்.

ரஜினி மக்கள் மன்றத்தின் அமெரிக்க தேசிய கிளையும், பின்னர் விர்ஜினியா, டிசி மற்றும் மேரிலாண்ட் மாகாண கிளை அமைப்புகளும் குத்துவிளக்கேற்றி துவங்கப்பட்டன. மாவட்ட செயலாளர் வெங்கட், பொறுப்பாளர்களை அறிமுகப்படுத்தினார்.

டொரோண்டோ-விலிருந்து, துடிப்புடன் நெடுந்தூரம் பயணித்து வந்திருந்த ரஜினி மக்கள் மன்றத்தின் கனேடிய தேசியக்குழுவினர் அனைவரையும் துணை செயலாளர் தீபா மோகன்தாஸ் அறிமுகப்படுத்தினார். சுகந்தி, மகளிர் அணி நிர்வாகிகளை அறிமுகப்படுத்தினார்.

விழா நிறைவாக, வெங்கட் நன்றியுரை கூறினார்.



SANKARA NETHRALAYA OM TRUST

# SANKARA NETHRALAYA &
# SANKARA NETHRALAYA OM TRUST, INC, USA

SANKARA NETHRALAYA




# A happy beneficiary in front of the MESU!

**Radha is among the millions of poor, vision impaired living in India's remote villages who cannot avail eye care at a base hospital, even if offered cost free.**

Sankara Nethralaya's ' One of its kind in Asia' Mobile Eye Surgical Unit (MESU) brings back the l ost vision right to their doorstep, by performing cataract surgery totally cost free, right at their village.

Please support the MESU in its noble journey of eradicating blindness in remote regions of rural India

Contributions made by Indians living in the USA help in performing a large ntumber of cost free surgeries every year

**All contributions to the SN OM Trust are 100% tax exempt in the USA under 501 (C)(3) of IRS**

Please contact: Mr. S.V. Acharya, President Emeritus, Sankara Nethralaya OM Trust Inc, USA
(855) 4NETHRA - Toll Free, e-mail id: acharya@snomtrust.org

Checks may be drawn on Sankara Nethralaya OM Trust Inc. Donate online : www.sankaranethralayausa.org

# பழங்கள் சாப்பிடும் முறை



ஹூஸ்டன் மாமி

**பழங்கள் உடலுக்கு நல்லதுதான். தினமும் பழங்களை சாப்பிடுவது நல்லது. பழங்களை 'எப்படி' அதுவும் 'எப்போது' சாப்பிடவேண்டும் என்பது மிகவும் முக்கியம்.**

*சரி... பழங்களைச் சாப்பிடும் சரியான முறை தான் என்ன?*

சாப்பிட்ட பிறகு பழங்களை எடுத்துக் கொள்வது நல்லது அல்ல! பழங்களை வெறும் வயிற்றிலேயே சாப்பிட வேண்டும்! பழங்களை வெறும் வயிற்றில் எடுத்துக் கொண்டால், அது நம் உடலின் நச்சுக்களை வெளியேற்றுவதிலும், எடை குறைப்பு, மற்றும் வாழ்வின் மற்ற செயல்களுக்குத் தேவையான அதிகப்படியான ஆற்றலைத் தருவதிலும் பெரும் பங்கு வகிக்கிறது!!

சாதாரணமாக நீங்கள் இரண்டு துண்டுகள் பிரட், அதன்பின் ஒரு துண்டு பழம் என்று எடுத்துக் கொள்கிறீர்கள் எனக் கொள்வோம். பழத்துண்டு வயிற்றின் வழியே நேராகக் குடலுக்குள் செல்லத் தயாராக இருக்கிறது. ஆனால், பழத்திற்கு முன்னால் எடுத்துக்கொண்ட 'பிரட்' டினால் பழம் குடல் பகுதிக்குச் செல்வது தடுக்கப்படுகிறது.

இந்த சராசரி நேரத்தில் முழு உணவான பிரட் மற்றும் பழம் இரண்டும் அழுகி, புளித்து, அமிலமாக மாறுகிறது. பழம் வயிற்றிலுள்ள உணவு மற்றும் செரிமானத்துக்கு உதவும் சாறுகளுடனும் சேரும் நேரத்தில், அந்த முழு நிறையான உணவு கெட்டுப் போக ஆரம்பிக்கிறது.

இதனால் புளிச்ச ஏப்பம் வரும். வாயு உற்பத்தியாகி, வயிறு கர்புர் என சத்தம் போட்டுக் கொண்டிருக்கும். வெறும் வயிற்றில் பழம் எடுத்துக் கொண்டால், இந்த மாதிரி நிலைமை தோன்றாது!

உணவுக்குப் பின் பழம் எடுக்கும்போது, பழமானது மற்ற உணவுடன் சேர்ந்து அழுகுவதால், வாயு உற்பத்தியாகி வயிறு ஊதக் காரணமாகிறது!!

நரைமுடி தோன்றுவது, தலையில் வழுக்கை விழுவது, நரம்புகளின் திடீர் எழுச்சி, கண்களின் கீழ் கருவளையம் தோன்றுவது. இவையெல்லாமே, வெறும் வயிற்றில் பழங்கள் எடுத்துக் கொண்டால் நடக்காது.

பழச்சாறு அருந்த தேவை ஏற்படும்போது, புதிதான பழச்சாறுகளையே அருந்துங்கள். டின், பாக்கெட் மற்றும் பாட்டில் இவற்றில் அடைக்கப்பட்ட ரெடிமேட் பழச்சாறுகள் வேண்டாம். சூடாக்கப்பட்ட பழச்சாறுகளையும் குடிக்க வேண்டாம்.

பதப்படுத்தப்பட்ட, சமைத்த பழங்களையும் உண்ணாதீர்கள். ஏனெனில் அவற்றிலிருந்து உங்களுக்கு எந்த விதமான சத்துக்களும் கிடைக்காது. சமைத்த பழங்களில் அதிலுள்ள விட்டமின்கள் அனைத்தும் அழிக்கப்படுகின்றன. உங்களுக்கு அதன் சுவை மட்டுமே கிடைக்கிறது.

ஆனால், பழச்சாறு சாறு அருந்துவதை விட , பழங்களை முழுதாகச் சாப்பிடுவது மிகவும் சிறந்தது. பழச்சாறு குடிப்பதாக இருந்தால், மடமடவென்று குடிக்காமல், மெதுவாக ஒவ்வொரு வாயாக அருந்தவும். பழச்சாறு விழுங்குவதற்கு முன், அதனை வாயிலுள்ள உமிழ்நீரோடு நன்கு கலக்கச் செய்து பின் உள்ளே அனுப்பவும்.

உங்கள் உடல் உறுப்புக்களைச் சுத்தம் செய்யவும், உடலில் இருந்து நச்சுக்களை வெளியேற்றவும் 3 நாட்களுக்கு பழங்களை மட்டுமே எடுத்துக் கொண்டு விரதம் இருக்கலாம்.

அந்த 3 நாட்களும், பழங்களை மட்டும் சாப்பிட்டு மற்றும் புதிதாய் எடுக்கப்பட்ட பழச்சாறுகளையும் மட்டுமே நாள் முழுவதும் எடுத்துக் கொள்ளுங்கள். இந்த டயட்டின் முடிவு, நீங்களே ஆச்சரியப்படும்படி இருக்கும் நீங்கள் மிகவும் அழகாய், வனப்புடன் தோற்றமளிப்பீர்கள்.

●




Miles Media
SOUTH ASIAN CONNECT

*In association with* **SWARAVEDIKA**

*Proudly Presents*

# Karthik & Friends

*Layers of Music*

## New Jersey

**Sunday, June 24 • 5:30 pm**

**Patriots Theater at the War Memorial**

1 Memorial Drive, Trenton, NJ 08608

*Featuring*
**Sivamani**
*and*
**Shakthisree**







**Tickets On Sale:** VVIP - $129 | VIP - $99 | GOLD - $79 | SILVER - $59 | BRONZE - $39

**Contact:** Susshma 908-636-8951

**To Buy Tickets Go To:** sulekha.com/karthikNJ

8K Radio TAMIL
Miles Kammi, Smiles Jaashthi!

India Abroad
8K CINEMAS




தமிழ்
எக்ஸ்பிரஸ்
வட அமெரிக்கத் தமிழர்களின் குரல்!




Entertainments
National Promoters

# பழங்களில் உள்ள சத்துக்கள்:



## பப்பாளி

பப்பாளி விட்டமின் - சி நிறைந்தது. பப்பாளிப்பழம் Carotene சத்துக்கள் நிறைந்தது. எனவே கண்களுக்கு மிகவும் நல்லது.

## ஆப்பிள்

ஆப்பிளில் விட்டமின் - சி சத்து குறைவாக இருப்பினும், அதில் உள்ள antioxidants ,flavonoids போன்றவை இந்த விட்டமின் - சி சத்துக்களை மேம்படுத்துவதால். பெருங்குடல் புற்றுநோய், மாரடைப்பு, பக்கவாதம் போன்ற ஆபத்துக்களைக் குறைக்கிறது!



## கொய்யா

கொய்யாப்பழத்தில் நார்ச்சத்து அபரிமிதமாக உள்ளதால், மலச் சிக்கலைத் தடுக்க உதவுகிறது. கொய்யாப்பழம், விட்டமின் - சி நிறைந்தது.



## ஆரஞ்சு

ஒரு நாளைக்கு 2 முதல் 4 வரை ஆரஞ்சு பழத்தை எடுப்பது ஜலதோஷத்தை விலக்கும். கொழுப்பைக் குறைக்க உதவும். மேலும் சிறுநீரகக் கற்களைக் கரைப்பதோடு, கற்கள் வராமலும் தடுக்கும். அதனுடன் பெருங்குடல் புற்றுநோயின் ஆபத்தினைக் குறைக்கிறது.

## தர்ப்பூசணி

தர்ப்பூசணியில் விட்டமின் - சி, பொட்டாசியம் ஆகிய சத்துக்கள் இருக்கின்றன. இந்தப் பழத்தில் அதிக அளவில் Glutathione இருப்பதால், அது நம் உடம்பின் நோய் எதிர்ப்பு சக்தியை அதிகரிக்க உதவுகிறது. மேலும், இது lycopene என்னும் புற்றுநோயை எதிர்த்துப் போராடும் ஒரு oxidant இன் முக்கிய ஆதாரமாகவும் உள்ளது.

## கிவி பழம்

இதில் பொட்டாசியம், மக்னீஷியம், விட்டமின் - ஈ மற்றும் நார்ச்சத்துக்கள் நிறைந்துள்ளன. ஆரஞ்சுப் பழத்தை விட விட்டமின் - சி சத்து கிவி பழத்தில் இரண்டு மடங்கு அதிகம் உள்ளது.



## ஸ்ட்ராபெர்ரி

இந்தப் பழத்தில் மற்ற எல்லாப் பழங்களையும் விட. மொத்த Antioxidant சக்தி இருக்கிறது. இரத்த நாளங்களில் அடைப்பு, புற்றுநோய்க் காரணிகள் பெருகுதல் முதலியவை ஏற்படாமல் நம்மைப் பாதுகாக்கிறது.

# ஹூஸ்டனில் அன்னையர் தினக் கொண்டாட்டம்




**அன்னையர் தினத்தை முன்னிட்டு, ஹூஸ்டனில் வாழும் தமிழ் சமுதாயத்தில் இருந்து ஐந்து சிறந்த அன்னையர்களை தேர்தெடுத்து அவர்களுக்கு Special Mother of 2018 என்ற சிறப்பு விருது வழங்கப்பட்டது.**

இந்த நிகழ்வு, ஸ்ரீ மீனாக்ஷி அம்மன் திருக்கோவிலில் உள்ள திருமண மண்டபத்தில் மே 6ம் தேதி நடைபெற்றது.

சிறந்த அன்னையர்களாக தேர்வு செய்யப்பட்ட பவானி ஐயர், நளினி பாலசுப்ரமணியன், லீலா கிருஷ்ணமூர்த்தி, ராஜி ஹரி, லட்சுமி பரமசிவன் ஆகியோர், மெட்ராஸ் பெலியனில் இருந்து உல்லாச ஊர்தியில் அழைத்து வரப்பட்டனர்.



TNF நடத்திய திருக்குறள் ஒப்புவித்தல் போட்டியில் அதிகமாக குறள்களை ஒப்புவித்த வித்யா கந்தசாமி, தீபலட்சுமி இளங்கோவன், ஈஷா ஜோதி, வருண், உதயன் என்ற 5 குழந்தைகளுக்கு கேடயங்களும், இதில் பங்கேற்ற 40 க்கும் மேற்பட்ட குழந்தைகளுக்கு தலா ஒரு டாலரும் வழங்கப்பட்டன.

TNF ஹூஸ்டன் தலைவர் கோவிந்தன் சோமாஸ்கந்தன், இந்த விழாவை தொடங்கி வைத்து TNF செய்து வரும் சேவையை பற்றி பேசினார். தமிழ்நாடு அறக்கட்டளையின் பணிகள் குறித்து தேசிய தலைவர் சோமலை சோமசுந்தரம் விவரித்தார்.

ஹார்வியால் பாதிக்கப்பட்ட ஹூஸ்டனில் இருக்கும் "Specil Cheers " என்ற பெரிய தொண்டு நிறுவனத்திற்கு தமிழ்நாடு அறக்கட்டளை 10 ஆயிரம் டாலர்களை வழங்கியது.

தமிழ்நாடு அறக்கட்டளைக்கு ஹூஸ்டன் மக்கள் சுமார் 35,000 டாலர்களை நன்கொடையாக வழங்கி தங்கள் கொடை உள்ளத்தை வெளிப்படுத்தினர். ●



# மைக்ரோ டாக்டர் 7



■ ராஜேஷ் குமார்

**வி**வேக் தயிர் சாதத்தை முடிக்கும்போதுதான் ரூபலாவிடம் சொன்னான்."ரூபி.. இன்னிக்கு சாயந்தரம் நான் வீட்டுக்கு வர கொஞ்சம் லேட்டாகும்.

"ஏன்..?"

"செங்கல்பட்டு வரைக்கும் போறேன். எனக்குத் தெரிஞ்ச டாக்டர் ஃப்ரண்ட் ஒருத்தர். உனக்குக் கூட தெரிஞ்சிருக்கும் விஸ்வேஸ்வரன்னு பேரு..?"

"ஆமா.. தெரியும்.. அவர்க்கு என்ன?"

"நவ் ஹி ஈஸ் நோ மோர்.. போன வாரம் இறந்துட்டாராம். எனக்கு நியூஸ் இன்னிக்குக் காலையில்தான் தெரிஞ்சுது. சாயந்தரம் செங்கல்பட்டு போய் அவரோட ஃபேமிலி மெம்பர்ஸைப் பார்த்து விசாரிச்சுட்டு வந்துடறேன்."

நம்பவே முடியலையே.. இதுக்கும் அவர் ஒரு டாக்டர்.. அதுவும் கார்டியாலாஜிஸ்ட்.."

"டாக்டராய் இருந்தா என்ன.. அவர்க்கு மட்டும் ஹார்ட் அட்டாக் வராதா என்ன?"

"நான் அதைச் சொல்லலை. நல்ல ஹெல்த்தியாய் இருந்தார். 'வயசு கூட நாப்பத்தஞ்சுக்கு மேல் இருக்காதுன்னு நினைக்கிறேன்.."

"ரூபி.. ஹார்ட் அட்டாக்கிற்கும் வயசுக்கும் எந்த ஒரு சம்பந்தமும் இல்லை. ரத்தக் குழாய்களில் திடீர்ன்னு அடைப்பு ஏற்படும் போதுதான் ஹார்ட் அட்டாக் வரும். பெரும்பாலான நேரங்களில் அந்த அட்டாக் மைல்டாய் இருக்கும். சில நேரங்களில் மட்டும்தான் 'மாஸிவ் அட்டாக்க் (massive attack) வரும். அப்படி வரும்போதுதான் உயிர்க்கு ஆபத்தான நிலைமை ஏற்படும்."

"இந்த மாஸிவ் அட்டாக் வரப்போவதை முன்கூட்டியே தெரிஞ்சுக்க முடியாதா..?"

"ரூபி.. ஒருத்தருக்கு மாரடைப்பு எப்போது வேண்டுமானாலும் வரலாம். மேலும் மாரபடைப்பிற்கான அறிகுறிகள் ஒவ்வொருத்தருக்கும் வேறுபடும். இதயத்திற்கு செல்லும் ஆக்ஸிஜன் அளவில் வேறுபாடு ஏற்படும்போது, மூளைக்கு உடனடியாய் தகவல் போகும். மூளை பதற்றமடைந்து கட்டளைகளைப் பிறப்பிக்க ஆரம்பிக்கும். மூளையின் முதல் கட்டளை உடம்பை வியர்க்க வைப்பதுதான்.

உடம்பு இப்படி வியர்ப்பதால் ரத்தத்தில் உள்ள கழிவுகள் கைகளில் வலியாக பரவும். இந்த அறிகுறிகள் தென்பட்டதுமே உடனடியாய் மருத்துவமனைக்கு சென்று அவசர சிகிச்சை எடுத்துக் கொள்வது அவசியம்."

"சரி! இந்த ஹார்ட் அட்டாக் வருவதற்கு என்ன காரணம்?"





"கரோனரி தமனிகள் எனப்படும் ரத்தக்குழாய்கள் கொண்டு செல்லும் ரத்தத்தில் இருந்து நம் இருதயம் ஆக்ஸிஜனையும், ஊட்டச்சத்துக்களையும் பெறுகிறது. இந்த கரோனரி ரத்தக்குழாய்களில் ஏதேனும் அடைப்பு ஏற்பட்டால் இதயத் தசைகள் ரத்தம் கிடைக்காமல் மெதுவாய் தன் செயல்பாடுகளை நிறுத்த ஆரம்பிக்கிறது. இதுவே மாரடைப்பு என்று அழைக்கப்படுகிறது.

ரூபலா குறுக்கிட்டுக் கேட்டாள்.

"ரத்தக்குழாயில் அடைப்பு ஏற்பட என்ன காரணம்?"

"வெளியே இருந்து பார்ப்பதற்கு சாதாரணமாய் தெரியும் ரத்தக்குழாய், மூன்று அடுக்குகளாக இருக்கும். இதில் முதல் இரண்டு அடுக்குகளுக்கு இடையில் ஒரு மனிதன் பிறந்த இரண்டு வருட காலத்திற்குள் ஃபேட்டி ஸ்டீரீக் (FATTY STREAK) எனப்படும் பாலாடை போன்ற ஒரு பொருள் படிய ஆரம்பிக்கும்.

அந்த மனிதன் குழந்தைப்பருவத்திலிருந்து வளர வளர அந்த ஃபேட்டி ஸ்டீரீக் ப்ளேக் (plaque) எனப்படும் கொழுப்புப் பொருளாக உருமாறும். இந்தக் கொழுப்புப் பொருள் ரத்தக்குழாயின் சுவர்களில் ஒட்டிக் கொண்டு சீரான ரத்த ஓட்டத்திற்கு தடைக்கற்களாக மாறும். ஒரு கட்டத்தில் ப்ளேக்குள் வெடித்து விடுவதால் அதன் அணுக்கள் ரத்த ஓட்டத்தில் பரவி, ரத்தத்தை உறைய வைத்து ரத்தக் குழாயை முழுமையாய் அடைத்துக் கொள்ளும். இப்படி அடைத்துக் கொள்ளும் போது மாரடைப்பு ஏற்படுகிறது.

"காரோனரி தமனி ரத்தக் குழாய்களில் அடைப்பு இருக்கா இல்லையான்னு எப்படி தெரிஞ்சுக்க முடியும்?"

"இப்போதைய மருத்துவ விஞ்ஞானப்படி ஆஞ்சியோ டெஸ்ட் எடுப்பதன் மூலமாய் அடைப்பு எத்தனை சதவீதம் இருக்குன்னு கண்டுபிடிச்சுடலாம். அடைப்பின் சதவீதம் அதிகமாய் இருக்கும் பட்சத்தில் பைபாஸ் சர்ஜரி செய்ய வேண்டிய கட்டாயம் ஏற்படும்.

ஆனா அடுத்த பத்து வருஷ காலத்துக்குள்ள இந்த ஆஞ்சியோ டெஸ்ட்டும் இருக்காது. பைபாஸ் சர்ஜரி பண்ண வேண்டிய அவசியமும் ஏற்படாது. இந்த ரெண்டையுமே ஒரு பத்து





நிமிஷம் நேரத்துக்குள்ள செஞ்சு முடிக்கக்கூடிய வேறு ஒரு வகையான ட்ரீட்மெண்ட் வரப்போகுது. அந்த ட்ரீட்மெண்ட்டைப் பண்ணப் போகிறவர் யார் தெரியுமா?"

"யாரு..?"

"மைக்ரோ டாக்டர்.."

ரூபலாவின் புருவங்கள் அரை மில்லி மீட்டர் உயரத்துக்கு உயர்ந்தன.

"மைக்ரோ டாக்டரா?"

"ஆமா.."

"மனிதனுக்கு மாரடைப்பு மட்டுமல்ல மற்ற நோய்களும் உயிர் ஆபத்தை உண்டாக்கக் கூடியதுதான். அந்த நோய்கள் எது எது என்று கண்டுபிடிக்கவும், கண்டுபிடித்த நோய்களை சரி செய்யவும் ஒரு மினிபோச்சர் மெடிக்கல் டிவைஸ் கண்டுபிடிக்கப்பட்டிருக்கு. அந்தக் கருவிக்குப் பெயர்தான் மைக்ரோ டாக்டர் (MICRO DOCTOR). இந்த மருத்துவக் கருவியின் நீளம் எவ்வளவு தெரியுமா ரூபி.. மூணே மூணு மில்லி மீட்டர்தான்."

"ரொம்பம் சின்னதாய் இருக்கும் போலிருக்கே?-

"ரொம்பச் சின்னதல்ல.. ரொம்ப ரொம்ப ரொம்ப சின்னது. ஒரு ஸ்கேலை எடுத்துப் பாரு.. மூணு மில்லி மீட்டர் எவ்வளவு சின்னதுன்னு புரியும்."

"சரி.. இது எப்படி வேலை செய்யும்?"

"இந்த மைக்ரோ டாக்டர் டிவைஸ் எந்த ஒரு திரவத்திலும் நீந்திக் கொண்டே பயணம் செல்லக்கூடியது. அடர்த்தி அதிகமான ரத்தம் போன்ற திரவத்திலும், ரத்தக் நோய்களிலும் பயணம் செய்து, ரத்தக் குழாயின் ஓரங்களில் படிந்துள்ள கொழுப்புப் பொருள்களைக் கரைத்து சுத்தம் செய்யும், ரத்த ஓட்டத்தை சீராக்கும். ரத்தக்குழாய்கள் ஏதேனும் ஒரு காரணத்தால், சிதைந்து போய் பழுதுபட்டிருந்தால், அந்த இடத்தில் தேவையான மருந்தைச் செலுத்தி சரி செய்யும்."

ரூபலாவின் உதடுகள் ஆச்சர்யத்தில் பிளந்தன.

"என்ன சொல்றீங்க.. ஒரு ரத்தக் குழாய்க்குள்ளே இந்த மைக்ரோ டாக்டர் கருவி எப்படி பயணம்




செய்யும்?"

"நம்பறதுக்கு கஷ்டமாத்தான் இருக்கும். ஆனா நம்பித்தான் ஆகணும். இந்த மைக்ரோ டாக்டர் இயக்கப்படுவது வயர்லஸ் மூலமாகத்தான். மனித உடலில் உச்சபட்ச வேகத்தில் ஒலி அலைகளை அனுப்ப முடியும் என்பதால் கருவியின் ஆண்டெனா மிக மிக நுண்ணியதாக இருக்கும். ரத்தக்குழாய்க்குள் இந்த மைக்ரோ டாக்டர் பயணம் செய்யும் போது இதனுடைய வேகம் விநாடிக்கு பாயின்ட் ஃபைவ் சென்டிமீட்டர்."

"இந்த மைக்ரோ டாக்டரை உருவாக்கினவர் யாரு?"

"ஒருத்தர் அல்ல.. மூன்று பேர்.. அமெரிக்காவின் ஸ்டான்போர்ட் பல்கலைக்கழகத்தில் உள்ள மருத்துவ பேராசிரியர்கள் மூன்று பேர் கூட்டாகச் சேர்ந்து இந்த மைக்ரோ டாக்டரைக் கண்டுபிடித்து இருக்கிறார்கள். ஒருத்தர் ஹடா பூன், இரண்டாவது நபர் டேனியல் பீவாங்கோ, மூன்றாவது நபர் அனாடோலி எகோ வெல்."

"இப்படிப்பட்ட பிரமிப்பான விஷயங்களை வெளிநாட்டில் இருக்கிற ஆராய்ச்சியாளர்களால் மட்டும் எப்படி செய்ய முடியுது?"

"அந்த நாட்டு அரசாங்கங்கள் ஏராளமான பொருள் உதவி செய்து ஆராய்ச்சிகளை ஊக்குவிக்கிறதுதான் காரணம். ஒரு லேட்டஸ்ட் கண்டுபிடிப்பைப் பற்றிச் சொல்லட்டுமா?"

"ம்.."

"ரோபோவுக்கு உயிர் இருக்கா இல்லையா?"

"இது என்ன கேள்வி.. ரோபோங்கிறதே ஒரு எந்திரம்தானே?"

"அதாவது பேட்டரியால் இயங்கக்கூடிய பொம்மை?"

"ஆமா"

"அந்த பொம்மைக்கு உயிர் கொடுத்தா எப்படி இருக்கும்?"

"ரோபோவுக்கு எப்படி உயிர் கொடுக்க முடியும்..?"

"கொடுத்து இருக்காங்க.. இங்கிலாந்து மற்றும் அமெரிக்க விஞ்ஞானிகள் இணைந்து 'நியூ காஸில்க் பல்கலைக்கழகத்தில் ஓர் உயிருள்ள ரோபோவை உருவாக்கியிருக்காங்க. அந்த உயிருள்ள ரோபோவின் பெயர் சைபர் பிளாசம்.."



"இதனுடைய பயன்பாடு என்ன?"

"'இந்த சைபர் பிளாசம்னு சொல்லப்படுகிற மிகச் சிறிய ரோபோவுக்குள் ஒரு பயோ-க்ளாக்கை விஞ்ஞானிகள் ஃபிக்ஸ் பண்ணியிருக்காங்க. அந்த பயோ க்ளாக்கில் ஒரு மின்னணு நரம்பு மண்டலமும் இருக்கும். இந்த நரம்பு மண்டலம் ஒரு மனிதனின் நரம்பு மண்டலத்துக்கு இணையானதாகும். ஒரு மனிதனால் என்னென்ன சுற்றுப்புற சூழ்நிலை உணர்வுகளைப் புரிந்து கொள்ள முடியுமோ, அந்த அளவுக்கு இந்த சைபர் பிளாசம் எனப்படும் ரோபோவால் புரிந்து கொள்ள முடியும்.

சூழ்நிலைக்கு ஏற்றாற்போல் நடந்து கொள்ளவும் முடியும். இந்த உயிருள்ள ரோபோவின் உயரம் இப்போது ரெண்டு சென்டிமீட்டர். எதிர்காலத்தில் இதன் உயரம் ஒரு மில்லிமீட்டருக்கும் குறைவாக இருக்கும் என்கிற நிலை வரும்போது இதனுடைய மருத்துவபணி சிறப்பாய் இருக்கும்.

இந்த ரோபோவுக்குள் சென்ஸார்கள் இருப்பதால், அது நமது உடம்பின் மூளையோடு இடைவிடாத தொடர்பு கொண்டு நம் உடம்பின் ஆரோக்கியதை உடனுக்குடன் தெரிவித்துக் கொண்டேயிருக்கும். உடம்பின் ஏதாவது ஒரு உறுப்பு நோய்வாய்ப்படும்போது, மூளை எச்சரிக்கை அடைந்து நோயை எதிர்கொள்ளவும், நோயைக் குணப்படுத்தவும் தேவையான நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ளும்."

"நீங்க சொல்றதைப் பார்த்தா எதிர்காலத்தில் நோய் கண்ட நபர்கள் யாரும் டாக்டர் கிட்டே போக மாட்டாங்க போலிருக்கே!"

"கண்டிப்பாக அந்த நிலைமையும் வரும். ஏன்னா இப்போ ரத்தத்துல சர்க்கரை இருக்கா இல்லையான்னு பார்க்க கிட்டத்தட்ட பெரும்பாலானோர் வீடுகளில் 'க்ளூகோமீட்டர் கருவி இருக்கு. அதே மாதிரி ரத்த அழுத்தத்தை பரிசோதித்துக் கொள்ளவும் கருவி இல்லை. சுகர், பி.பி.பார்க்க, இப்போ டாக்டர்கள் கிட்டே யாரும் போவது இல்லை.

இப்படிப்பட்ட நிலைமை சைபர் பிளாசம் ரோபோ பயன்பாட்டுக்கு வரும்போது எல்லோர் வீட்டிலேயும் அது இருக்கும். விலை குறையும்போது பெரும்பாலானோர் வீடுகளில் விக்ஸ் வேபாரப் ஜலதோஷ மருந்து இருக்கிற மாதிரி, இந்த சைபர் பிளாசம் ரோபோவும் இருக்கும்.

●

# ரஜினி

## ஒரு மனிதநேய மகான்



### கலை இயக்குநர் ராமலிங்கம்



**கா**லா பாடல்கள் வெளியீட்டு விழாவில், 'எனக்கு போர் அடித்தால் ராமலிங்கத்தைத் தான் அழைத்து பேசுவேன். மகாபாரதம் ராமாயணம், அம்பேத்கர் என எல்லாவற்றையும் பேசுவார்' என ரஜினி பெருமை பொங்க சொல்லப்பட்டவர், கபாலி, காலா ஆகிய படங்களின் கலை இயக்குநர் ராமலிங்கம். தற்போது, கைவசம் பல படங்களை குவித்து வைத்திருக்கும் எளிமையானவர். வண்ணங்களின் கண்ணன். ரஜினியுடனான தன் அனுபவத்தை முதல் முதலாக நம்மிடம் பகிர்ந்து கொள்கிறார்.

- **முதன் முதலில் ரஜினியை பார்த்த போது எப்படி உணர்ந்தீர்கள்?**

அதற்கு முதலில் அவருக்கும் எனக்கும் இருந்த தொடர்பைப் பற்றி சொல்ல வேண்டும். நான் அடிப்படையில் ரஜினி ரசிகன். ரசிகன் என்றால், வெறும் ரசிகன் அல்ல. வெறித்தனமான ரசிகன். வீடு முழுக்க ரஜினி புகைப்படங்களை ஒட்டி வைத்து அழகு பார்த்த ரசிகன். ஊரில் திருவிழா நடந்தால் ரஜினி படங்களைத் தான் திரையிடுவோம்.

இப்போது போல் அப்போது வசதிகள் இல்லை. வீடியோ டெக் எடுத்து தான் ஒளிபரப்ப வேண்டிய நிலை. ஆனால், அதற்கு நிறைய செலவாகும். ஆனாலும் அது மானப்பிரச்சனை. எப்படியாவது தலைவர் படத்தை போட்டு விட வேண்டும் என்று முடிவு செய்து, வீட்டில் இருந்த அரிசியை விற்று, 150 ரூபாய்க்கு, ஐந்து படங்கள் ஒளிபரப்பினேன்.



அப்போது நான் வெறும் எட்டாம் வகுப்பு மட்டுமே படித்துக் கொண்டிருந்தேன். அவ்வளவு தீவிர ரசிகன் நான். இன்னொன்றை சொன்னால் நீங்கள் மிரண்டு போவீர்கள். நான் பதினோராம் வகுப்பு படிக்கும் போது, சட்டையில் ரஜினி படத்தை ஒட்டி வைத்திருந்தேன். ஆசிரியர்கள் அதை அகற்றச் சொன்னார்கள்.

என் வெள்ளைச் சட்டைகள் எல்லாவற்றிலும் ரஜினி படம் இருந்தது. இப்படி சட்டை போட்டு வந்தால் தேர்வு எழுத அனுமதிக்க முடியாது என்றனர். அப்படி ஒரு தேர்வே வேண்டாம் என வெளியில் வந்து விட்டேன்.

அந்தளவுக்கு ரஜினி என்றால் எனக்கு உயிர். மெட்ராஸ்க்குப்

பிறகு, ஊரில் சில வேலை. ஊருக்குப் போயிருந்தேன். அந்த நேரம் இயக்குநர் ரஞ்சித்திடம் இருந்து போன் வந்தது. 'படம் கன்பார்ம் ஆகி விட்டது. நாளை சந்திக்கச் செல்கிறோம். போயஸ்கார்டன் வந்து விடுங்கள்' என்றார்.

என்னால் நம்பவே முடியவில்லை. எந்த இடத்தில் நான் பணம் திருடி டெக் எடுத்து போட்டேனோ, எந்த இடத்தில் தலைவருக்காக சண்டை போட்டேனோ அந்த இடத்தில் இருக்கும் போது போன் வந்தது, நான் இறந்தாலும் மறக்காத நொடிகள். ஊரில் இருந்தே போயஸ்கார்டன் சென்றேன். முதல் முறை பார்த்ததும் அழுது விட்டேன்.

♦ **இதை எல்லாம் அவரிடம் சொன்னீர்களா?**

முதன் முதலில் இயக்குநர் ரஞ்சித் என்னை அறிமுகம் செய்து வைத்த போது, 'இவர் உங்கள் தீவிர ரசிகர். உங்களைப் பற்றி யார் என்ன சொன்னாலும் சண்டைக்குப் போய் விடுவார்' என்றே அறிமுகப்படுத்தி வைத்தார். எனக்கு உச்சி முதல் உள்ளங்கால் வரை ஜிவ்வென்ற உணர்வு ஏற்பட்டது. என் மனதில் பட்டதை எல்லாம் அவரிடம் அன்று பேசினேன்.

♦ **பின் எப்படி நெருக்கம் ஆனீர்கள்?**

கபாலி படப்பிடிப்புக்கு வரும் போது, எல்லோருக்கும் வணக்கம் சொல்லி வந்தால், என் முறை வரும் போது, அந்த வணக்கத்தில் கூடுதல் அன்பும் அக்கறையும் இருக்கும். படப்பிடிப்பு இடைவெளியின் போது பேசுவேன். அவருடைய தீவிர ரசிகன் என்பதால், அவரும் மிகுந்த விருப்பத்துடன் பேசுவார். பின், கொஞ்ச நேரம் ஓய்வு கிடைத்தால் கூட என்னை அழைத்து விடுவார்.

ஆரம்பத்தில் சார் சார் என்றே அழைத்தார். 'தலைவரே, என்னை நீங்கள் சார் என்று கூப்பிடும் போது, எனக்கு ஒரு மாதிரி இருக்கிறது. எனக்காக பேரைச் சொல்லி கூப்பிடுங்கள்' என்றேன். உங்கள் பொறுப்புக்கு நான் மரியாதை கொடுக்க வேண்டும் என்றார். அதெல்லாம் அடுத்தவர்களுக்கு. என்னை நீங்கள் பேர் சொல்லியே கூப்பிட வேண்டும்



என உரிமையுடன் கோரிக்கை வைத்தேன். அன்றிலிருந்து பேரைச் சொல்லியே கூப்பிட்டார்.

♦ **அப்படி என்ன தான் பேசுவீர்கள்?**

எல்லாவற்றையும் பேசுவோம். கலை, இலக்கியம், அரசியல், சமூகம், பொருளாதாரம் என எல்லாவற்றையும் பேசுவோம். குறிப்பாக, என் வாழ்வு அனுபவங்கள் குறித்தும், ஒரு ரசிகனாக எனக்கு நேர்ந்த அனுபவங்கள் குறித்தும் பேசுவேன். நிறைய விவாதங்கள் நடக்கும். நிறைய புத்தகங்கள் பரிசளித்திருக்கிறேன்.

குறிப்பாக, 'தலித்துகள் ஏன் காந்தியிடம் எச்சரிக்கையாக இருக்க வேண்டும்' என்ற அம்பேத்கரின் புத்தகம். அது குறித்து நாங்கள் நிறைய விவாதம் செய்திருக்கிறோம். அவர் அவருடைய தரப்பை சொல்லுவார். இதைத் தாண்டி, ராமாயணம், மகாபாரதம் குறித்து நிறைய பேசுவோம்.

என் அப்பா, கூத்துக்கலைஞர் என்பதால், பாரதக்கதைகள் சிறுவயதில் இருந்தே எனக்கு ஊறிப் போன ஒன்று. அது குறித்து இரண்டு பேரும் அவரவர் கருத்துக்களை பகிர்ந்து





**வெறும் போட்டோ மட்டும் எடுத்து, சம்பிரதாயத்துக்கு பேசி அவர்களை வழியனுப்பி இருக்கலாம். ஆனால், ரஜினி செய்யவில்லை. ஏனென்றால், அவர் ரஜினி!**





கொள்வோம். அவர் ஆன்மிகம் குறித்து பேசுவார். அது வெறும் கடவுள் நம்பிக்கை என்பதைத் தாண்டி, எல்லோரும் சமம் என்கிற தத்துவத்தில் முடியும். நாங்கள் பேசிக் கொண்டிருந்தால் நேரம் போவதே தெரியாது. படப்பிடிப்பு இடைவெளியில் ஏறக்குறைய 2 மணிநேரம் கூட பேசி இருக்கிறோம்.

♦ **ரஜினிக்கு நீங்கள் என்னவாக இருந்தீர்கள் என்று கேட்டீர்களா?**

பொழுது போகவில்லை என்பதற்காகத் தான் நம்மிடம் பேசுகிறாரோ என்று ஒருநாள் எனக்கு சந்தேகம் வந்தது. இதை எப்படியாவது கண்டுபிடிக்க வேண்டும் என முடிவு செய்தேன். இரண்டு நாட்கள் அவர் கண்ணில் படாமல் இருக்க வேண்டும். அதை மறைந்திருந்து பார்க்க வேண்டும். அவர் கண்கள் நம்மை தேடுகிறதா, யாரிடமாவது நம்மைப் பற்றி கேட்கிறாரா என அறிய நினைத்தேன்.

அதைப் போலவே செய்தேன். அவர் வரும் நேரம் எல்லாம் திட்டமிட்டு தவிர்த்து ஒதுங்கினேன். அவர் போகிற பாதையில் தலை வைத்து கூட படுக்காமல் தவிர்த்தேன். படப்பிடிப்பில் ஒருநாள் அவரை கடந்து செல்ல வேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. சட்டென என்னை கண்டுபிடித்து விட்டார். நான் ஓரமாக போனேன். 'ராமலிங்கம் இங்க வாங்க' என்றார்.

அப்போதே உள்ளுக்குள் ஒரு வித உணர்ச்சி பெருக்கெடுத்தது. 'ரெண்டு நாளா எங்க போனீங்க; ஆளே காணோம். உடம்புக்கு ஒண்ணும் இல்லையே' என தொட்டுப் பார்த்தார். நான் அப்படியே சரணாகதி ஆகி விட்டேன். அவர் சூப்பர் ஸ்டாராக இருப்பதற்கு இது தான் காரணம். அவர் போலியாக பழக மாட்டார். பழகவும் தெரியாது.

♦ **வாழ்க்கையில் மறக்கவே முடியாத சம்பவங்கள் ஏதேனும் ரஜினியுடன் நிகழ்ந்ததுண்டா?**

ஒன்றா இரண்டா? அடுக்கிக் கொண்டே போகலாம். அவ்வளவு அனுபவங்களை தந்திருக்கிறார். ஒருமுறை, காலா படப்பிடிப்பின் போது, அம்மாவை அறிமுகம் செய்ய அழைத்து வந்திருந்தேன். அம்மாவை பார்த்தவுடன் அவருக்கு பயங்கர மகிழ்ச்சி.

செட்டுக்கு அழைத்துப் போனார். அதில் உள்ள கலை அலங்காரங்களை ஒரு குழந்தை மாதிரி அம்மாவுக்கு விளக்கிக் கொண்டிருந்தார். அவருடைய கண்களை உற்று கவனித்தேன். அவ்வளவு துள்ளல். அவ்வளவு மகிழ்ச்சி. தன் தாயிடம் உரையாடுவதைப் போல் உரையாடினார்.

'எல்லாத்தையும் பாத்தீங்கள்ள, நீங்க பெத்துருக்கது சாதாரண பிள்ளை இல்லை. பெரிய கலைஞன்' என்று அவர் சொன்ன அந்த நொடி, என்னை அறியாமலேயே என் கண்களில் இருந்து கண்ணீர் குபுக்கென்று பெருக்கெடுத்து ஓடியது. தான் உயிராக நினைத்த தலைவன், தன் ரசிகனை பாராட்டும் அந்த அற்புத நொடி என் வாழ்நாளில் மறக்க முடியாதது.

வெறும் போட்டோ மட்டும் எடுத்து, சம்பிரதாயத்துக்கு பேசி அவர்களை வழியனுப்பி இருக்கலாம். ஆனால், ரஜினி செய்யவில்லை. ஏனென்றால், அவர் ரஜினி!



# படித்ததில் பிடித்தது

## புறாவின் வாய் ஜாலம்!

**சா**லமன் மன்னன் மிகப்பெரிய அறிவாளி. அவருக்குப் பறவைகள் மற்றும் மிருகங்கள் பேசும் மொழியும் புரியும். ஒருமுறை அரண்மனையில் உட்கார்ந்து கொண்டு வெளியே பார்த்தார்.

இரு புறாக்கள் தங்களுக்குள் சண்டை போட்டுக் கொண்டிருந்தன. அப்போது ஆண் புறா, பெண் புறாவிடம் கோபமாக, "என்னை என்னவென்று நினைத்தாய்? நான் மனம் வைத்தால், இந்த மன்னரின் அரண்மனையையே இடித்து நிர்மூலமாக்கி விடுவேன்" என்று கூறியது.

இதனைக் கேட்ட சாலமன் மன்னர், அந்த ஆண் புறாவைத் தன் அருகில் அழைத்தார். அருகில் வந்த புறாவிடம்,

"என்ன புறாவே.... இந்த அரண்மனையை இடித்து விடுகிறேன் என்றாயே.... எப்படி உன்னால் முடியும்?" என்று கேட்டார்.

அதற்கு அந்த ஆண் புறா, "மன்னரே.... என்னால் எப்படி முடியும்? ஏதோ என் மனைவியைத் திருப்தி செய்ய கூறினேன். அதை ஒரு பொருட்டாக எடுத்துக் கொள்ளாதீர்கள்" என்று கூறிவிட்டு தன் மனைவியிடம் சென்றது.



"மன்னர் கூப்பிட்டாரே.... எதற்குக் கூப்பிட்டார்?" என்று பெண்புறா கேட்டது.

"நான் அரண்மனையைத் தகர்த்து விடுவேன் என்று உன்னிடம் சொன்னதை மன்னர் கேட்டு பயந்து விட்டார். எனவே தான் என்னைக் கூப்பிட்டு அப்படியெல்லாம் செய்துவிடாதே... என்று என்னிடம் கெஞ்சிக் கேட்டுக்கொண்டார்" என்றதாம் ஆண்புறா.

## காலணிகளை சுமந்த கண்ணன்



**பாண்டவர்கள். போரில் அழிந்து போய் விடுவார்கள் என திரௌபதி பயந்து, கண்ணனிடம் ஆலோசனை கேட்டாள்.**

கண்ணன் சொன்னார் "நான் இப்போது ஒருவரிடம் அழைத்து செல்கிறேன். நீ போய் அவரின் காலில் விழு. 'தீர்க்க சுமங்கலி பவ' என்று அவர் வாயால் வாழ்த்தும் வரை எழுந்திருக்காதே"

கிருஷ்ணர், திரௌபதியை பீஷ்மரிடம் அழைத்துச் சென்றார். அந்த இடம் முழுவதும் இருள் சூழ்ந்து இருந்தது. அருகில் இருக்கும் ஆள் கூட யார் என சரியாகப் புலப்படாத நேரம். கண்ணன் சொன்னார் "இருட்டில் நடக்கும் சத்தம் கேட்கக் கூடாது. காலணிகளை கழற்றி விடு" என்றார்.

திரௌபதி சென்று, பீஷ்மர் காலில் விழுந்தாள். அவர் "நீண்ட நாள் வாழ்க" என வாழ்த்த .... திரௌபதி எழவில்லை. பின் தீர்க்க சுமங்கலி பவ என வாழ்த்தினார். பாஞ்சாலி எழுந்து "இப்போது தான் எனக்கு பயம் விலகியது. இனி என் கணவர்களுக்கு ஆபத்தில்லை" என்றாள்.

பீஷ்மர் அதிர்ந்தாலும் கூட, இவளின் செயலைக் கண்டு "இந்த ஆலோசனை யாருடையது ? உன்னுடையதாக இருக்காது" என்றார்.

"இது அ(க)ண்ணனின் ஆலோசனை. வாயிலில் நிற்கிறார்"

பீஷ்மர் வாசலில் வந்து பார்த்தார். அங்கே....கண்ணன் திரௌபதியின் செருப்புகளை கையில் வைத்துக் கொண்டு நிற்கிறார். எவருடைய பாதக் கமலங்களை நோக்கி இந்த உலக உயிர்கள் எல்லாம் சென்று கொண்டிருக்கிறதோ, அவர்.. அந்த பக்த வாத்ஸல்யப் பிரபு... தன்னைச் சரணடைந்த தன் பக்தை திரௌபதியின் காலணிகளைக் கூட சுமந்தார்.

# இறைவன் விரும்புவது எது?



**குயவன் ஒருவன் பானைகளைச் செய்து கொண்டிருந்தான். அங்கு ஏராளமான பானைகள், குடங்கள், சட்டிகள் அடுக்கப்பட்டிருந்தன. அவன் அருகில் ஓர் ஆடு கட்டிப் போடப்பட்டிருந்தது. அவ்வப்போது அது கத்திக் கொண்டிருந்தது.**

வயதான மகான் ஒருவர், மெல்ல நடந்து அங்கே வந்தார். குயவன் பானை செய்வதைப் பார்த்தபடியே தரையில் அமர்ந்தார். வந்தவருக்கு ஒரு சிறு மண் கலயத்தில் குடிக்கத் தண்ணீர் கொடுத்தான் அந்தக் குயவன். அதை வாங்கிக் குடித்த குரு... "இந்த ஆட்டை நீ வளர்த்து வருகிறாயா?" என்று கேட்டார்.

"இல்லீங்க, சாமி. இது ஏதோ காட்டாடு. இந்தப் பக்கமாக வந்தது. பிடித்துக் கட்டிப் போட்டேன்!" என்றான் குயவன். "எதற்காக?" என்று கேட்டார் குரு. "பண்டிகை வரப்போகிறதே! இறைவனுக்கு பலி கொடுக்கலாமென்று தான்...." என்று இழுத்தான் குயவன்.

"பலியா?" குரு வியப்புடன் கேட்டார். "ஆமாம், சாமி. தெய்வத்துக்குத் திருவிழா அன்றைக்குப் பலி கொடுத்தால் விசேஷம். தெய்வம் மகிழ்ந்து வரம் கொடுக்கும். எல்லாம் சுபீட்சமாகயிருக்கும்."

இதைக் கேட்ட குரு எழுந்தார். தன் கையிலிருந்த மண் பானையை ஓங்கித் தரையில் அடித்தார். பானை துண்டு துண்டாகச் சிதறியது. குயவன் திகைத்து நின்றான். துறவியை வெறித்துப் பார்த்தான்.

# ஒரு போர் வீரனின் நினைவுகள்:



**மாஸ்கோவை நோக்கி சென்று கொண்டிருந்த ரயில், நள்ளிரவில் ஒரு ஸ்டேஷனில் நின்றது. திடகாத்திரமான உடல் கொண்ட ஒருவர், ரயிலில் ஏறினார். வண்டி புறப்பட்டது. எனக்கு தொந்தரவளிக்காமல் எதிர் இருக்கையில் அமர்ந்தார். உருவத்துக்கு சம்பந்தமின்றி சின்னஞ்சிறிய கைக்குட்டை வைத்திருந்தார். பூ வேலைகளுடன் அழகாக இருந்தது.**

"என்ன பார்க்கிறீர்" என்றார். "கைக்குட்டை இவ்வளவு சின்னதாக இருக்கிறதே" என்றேன். சொல்ல ஆரம்பித்தார்...

"உலகப் போர் நடந்து கொண்டிருந்த காலம். பனி, பட்டினி என மாஸ்கோ அல்லலுற்றது. அனாதை ஆஸ்ரமம் ஒன்றுக்கு, ராணுவ வீரர்களாகிய நாங்கள் ஒரு நிகழ்ச்சிக்குப் போனோம். ஒரு சிறுமி என்னை தனியாக அழைத்தாள்.

"உங்களுக்கு ஒரு பரிசு தருவேன். அதை இப்போது பார்க்க கூடாது. பாசிச ஜெர்மனியை நீங்கள் வெல்லும் தினத்தன்று, இதை திறக்க வேண்டும்" என்றாள். நாம் வெல்வோம் என்ற அவள் நம்பிக்கை எனக்கு சிலிர்ப்பூட்டியது.

பரிசை வாங்கிக் கொண்டேன். போர் தொடர்ந்தது. எத்தனையோ ஆபத்துகளில் சிக்கினேன். வெள்ளத்தில் மூழ்கினேன். ஆனால், பரிசை திறக்கவும் இல்லை கைவிடவும் இல்லை. அந்த தினம்வந்தே விட்டது. ஆம் பெர்லினை வீழ்த்தினோம். பெர்லினில் செங்கொடி பறந்தது.

பரிசைபிரித்தேன். ஒரு கைக்குட்டை. ஒரு கடிதம். படித்தேன். - பாசிச சக்திகளை வென்றமைக்கு பாராட்டுகள். ஜெர்மன் நாடாளுமன்ற இடிபாடுகளின் மேலேறி கைக்குட்டையை ரஷ்யாவின் திசைநோக்கி ஆட்டுங்கள். நானும் ரஷ்யாவில் இருந்தபடி ஜெர்மனியை நோக்கி கையசைப்பேன் என எழுதி இருந்தாள் அவள்.

சின்ன வயதில் எத்தனை தேச பக்தி. வீரம். அவள் சொன்னபடி கைக்குட்டையை ரஷ்யாவை நோக்கி ஆட்டினேன். அந்த கைக்குட்டைதான் இது" என்றார்.

"மெய்யாகவே வியப்பளிக்கிறது. அந்த சிறுமியை அதற்குப்பின் பார்த்தீர்களா". என கேட்டேன். "ஆமாம் பள்ளியில் சேர்ந்து நன்றாக படிக்கிறாள். தன் அப்பாவுக்காக வீட்டில் காத்திருப்பாள்" என்றார்.

"அப்பாவா. அவள் அனாதை அல்லவா" என்றேன்.

"இல்லை.. அவள் இப்போது என் மகள்" என்றார்.

துறவி நிதானமாக கீழே குனிந்தார். சிதறிய ஓட்டாஞ் சில்லுகளை ஒன்றுவிடாமல் அடுக்கினார். குயவனிடம் நீட்டினார். "என்ன இது?" என்றான் குயவன்.

கோபமாக. "உனக்குப் பிடிக்குமே, அப்பா?" என்றார் குரு.

"என்ன உளறுகிறீர்கள்?" குயவன் குரலில் உஷ்ணம் தெறித்தது. "என்னுடைய பானையை உடைத்து, அடுக்கி என்னிடமே நீட்டுகிறீர்கள். இது எனக்குப் பிடிக்கும் என்று வேறு சொல்கிறீர்கள். கேலியா? கிண்டலா? வம்புக்கு இழுக்கிறீர்களா? அல்லது உங்களுக்குப் பித்தா?" என்று ஆத்திரப்பட்டான்.

"அப்படியெல்லாம் எதுவும் இல்லையப்பா. உண்மையான அன்புடன் தான் செய்தேன் "குரு சிறிதும் பதற்றப்படாமல் சொன்னார்.

"நான் செய்த அந்தப் பானையில் என் உழைப்பு முழுவதும் அடங்கியிருக்கிறதே! அதை உடைக்க நான் எப்படிச் சம்மதிப்பேன்? இது எனக்குப் பிடிக்கும் என்று யார் உமக்குச் சொன்னது?"

"நல்லது. ஆண்டவன் படைத்த ஓர் உயிரை கதறக் கதற வெட்டிக் கொன்று பலியிடலாம் என்று யார் சொன்னது? இதை இறைவன் மகிழ்ந்து ஏற்றுக்கொண்டு வரம் தருவான் என்று நீ எப்படி நம்புகிறாய்? எந்தத் தாய், தன் குழந்தை கதறுவதைக் கேட்டுச் சகிப்பாள்? எந்தத் தகப்பன் தன் குழந்தை கொல்லப்படுவதை விரும்புவான்? " குருவிடமிருந்து அடுக்கடுக்காகக் கேள்விகள் பிறந்தன.

குயவன் நிதானமாக ஆட்டின் கழுத்திலிருந்த கயிற்றை அவிழ்க்கத் தொடங்கினான். இறைவனிடம் என்ன இல்லை? உன்னிடம் என்ன உண்டு? அவர் எதை கேட்கிறார்? எதை நீ அளிப்பாய்?

அவன் படைத்த உலகில், அவன் படைத்த நீ, அவன் படைத்த பொருட்களை அவனுக்கே படைப்பாயா? இறைவனுக்கு நான் அதைச் செய்தேன். இதைச் செய்வேன் என்பதும், பதிலுக்கு அவன் அதைச் செய்வான், இதைச் செய்வான் என்பதும் வெறும் ஆத்ம வஞ்சனையே!

எண்ணங்களால் மட்டுமே இறைவனை உணரமுடியும். தூய மனத்தால் மட்டுமே இறையுணர்வை எய்த முடியும். "அன்பு மலர் எடுத்து அனுதினமும் பூசை செய்வாய்"... இப்படி நாம் எல்லா ஜீவன்களிடமும் அன்பு செலுத்தி வாழ்வதையே இறைவன் விரும்புகிறார்.

# ஆணவம்



**எலி ஒன்று வைர வியாபாரி வீட்டிலிருந்த ஒரு வைரத்தை விழுங்கிவிட்டது. மிகவும் விலை உயர்ந்த வைரம் அது.**

வியாபாரி எலி பிடிப்பவனை பார்த்து எப்படியாவது அந்த எலியை "ஷூட்" செய்து வயிற்றில் இருக்கும் வைரத்தை எடுக்க உதவ வேண்டும் என கேட்டுக் கொண்டார். எலி பிடிப்பவனும் தன் துப்பாக்கியுடன் வந்துவிட்டான். அதை ஷூட் செய்ய. எலி அங்கே... இங்கே... என்று போக்கு காட்டி ஓடியதில், திடீரென்று ஆயிரக்கணக்கான சக எலிகள் ஒன்று கூடிவிட்டன.

ஆயிரக்கணக்கான எலிகளுக்கு இடையேயும் அந்த வைரம் முழுங்கிய எலி மட்டும் அந்த எலிக்கூட்டத்தோடு சேராமல், ஒதுங்கி தனித்தே நின்றிருந்தது . எலி பிடிப்பவனுக்கு அது வசதியாக போய்விட்டது. சரியாக குறி பார்த்து அந்த எலியை சுட்டான். எலி spot out.

வைர வியாபாரி சந்தோஷமாக அந்த எலியின் வயிற்றைக் கிழித்து வைரத்தை எடுத்துக் கொண்டான். ஆனால், ஒரு கேள்வியை எலி பிடிப்பவனைப் பார்த்து வைர வியாபாரி கேட்டான். "ஆமா...! அந்த எலி மாத்திரம் மற்ற எலிகளோடு சேராமல் தனியே தனித்தே இருந்ததே! நீயும் அதை சரியாக அடையாளம் கண்டு சுட்டுவிட்டாய்.. என்ன காரணம்?" என்றான்.

அந்த எலி பிடிப்பவன் பதில் சொன்னான், "தன் வயிற்றில் வைரம் இருப்பதால் மற்ற எலிகளை விட தான் மிகவும் உயர்ந்தவன் என்ற ஆணவம் அந்த எலிக்கு இருந்தது. அதனால் மற்ற எலிகளோடு சேராமல் இருந்து என்னிடம் மாட்டிக் கொண்டது.

இப்படித்தான் பலபேர், திடீர் பணக்காரர்கள் ஆனதும் மற்றவர்களை விட நாம் உயர்ந்தவர் என்ற எண்ணம் கொண்டு, மற்றவர்களுடன் தன்னை சேர்க்காமல், தனித்து நிற்பார்கள். அதுவே. ஆபத்தில் அவர்களுக்கு உதவாமல் போய்விடும் என்றான்.

உறவுகளும் அப்படித்தான்... சிலர் இடையில் வந்து அழிந்துபோகும் செல்வத்தை நம்பி, கடவுள் கொடுத்த உறவுகளை அசட்டை செய்து விட்டு விடுகிறார்கள். ஆயிரம் கோடி செல்வம் இருந்தாலும் சொந்த பந்தமும், நல்ல நட்புமுமே கடைசி வரையில் நம்முடன் இருக்கும்..

உணவு வரலாறு 12

# மைசூர்பாகு

■ செல்வமணி

**மைசூர் பாக்கு என்று சொல்லும் போதே, நாக்கில் நீர் சுரப்பதை நம்மால் தவிர்க்கவே முடியாது. தென்னிந்தியாவில் எல்லா பண்டிகைகளிலும் மைசூர்பாக்கு முக்கிய இடம் பிடித்திருக்கும்.**

இதன் பிறப்பிடம், அதன் பெயரிலேயே இருக்கும். ஆம். மைசூர் தான் இதன் பிறப்பிடம். இது, மைசூரில் பிறந்தாலும், இப்போது இந்தியா முழுவதும் மட்டுமல்ல, இந்தியர்கள் வாழும் எல்லா இடங்களிலும் பரவிக்கிடக்கிறது.

இதை மைசூர் பாகா, மைசூர் பாகு என்றும் அழைப்பார்கள். சர்க்கரையை உருக்கிவரும் கரைசலை பாக் அல்லது பாகா என்பது அழைப்பார்கள். அதாவது இனிப்பு வகைகள் செய்வதற்காக சர்க்கரையையோ அல்லது வெல்லத்தையோ உருக்கி எடுப்பதையே பாகு என்பார்கள்.

**மைசூர் பாகின் வரலாறு குறித்து வேறு ஒரு கருத்தும் கூறப்படுகிறது.**

**வெள்ளையர்கள் ஆட்சிக் காலத்தில் அதிகாரியாக இருந்த மெக்காலே என்பவர், 1853, பிப்ரவரி 2 ம் தேதி, மைசூர்பாகை கண்டுபிடித்தவர்கள் மதராசியுள்ள தமிழர்கள் என குறிப்பு எழுதி வைத்துள்ளார். மதராசில் இருந்து மைசூர்பாகை தயாரிக்கும் வழியை அறிந்த கர்நாடக நீதிபதி ஒருவர் அதை மைசூர் மன்னரிடம் தெரிவித்தாக மெக்காலே குறிப்பிட்டுள்ளார்.**

மைசூர் பாக் முதலில், மசூர் பருப்பு என அழைக்கப் படும் சிவந்த நிறப் பருப்பை வறுத்து, ஊற வைத்து, சர்க்கரை அல்லது வெல்லம் சேர்த்து செய்யப் பட்டுள்ளது.

பின்னர் கொஞ்சம் கொஞ்சமாக மசூர் பருப்பை இயந்திரத்தில் அரைத்துச் செய்யப் பட்டது. அதன் பின்னர் மேலும் பல மாற்றங்கள் ஏற்பட்டது. மசூர் பருப்பு மாவு மிஷினில் அரைக்கப்பட்டுச் செய்யப்பட்டது. பின் காலப்போக்கில் கடலை மாவுக் கொண்டும் மைசூர்பாக் தயாரிக்க ஆரம்பித்துவிட்டனர்.

## வரலாறு

நான்காம் கிருஷ்ணா ராஜ உடையார் மைசூரின் மன்னராக 1894 ஆம் ஆண்டு பதவி ஏற்றார். தான் இறக்கும் வரை (அதாவது 1940 ஆம் ஆண்டு வரை) இவர் ஆட்சியில் இருந்தார். மைசூர் பாகு கண்டுபிடிக்கப்பட்டது இவரின் காலகட்டத்தில்தான்.

மைசூர் அரசவையில் காகசூரா மாடப்பா என்பவர் சமையல் கலைஞராக இருந்தார். அரசரின் விருப்பத்திற்காக வித்தியாசமான உணவுப் பண்டத்தை அடிக்கடி தயாரித்து கொடுப்பார் காகாசூரா மடப்பா. ஒரு முறை, சர்க்கரையை பாகாக் காய்ச்சி அதில் கடலை மாவு மற்றும் நெய்யை சேர்த்துக் கிளறி, புதிய வகை இனிப்பு பண்டத்தை தயாரித்தார்.

இதை முதன் முதலில் அரசருக்கு பரிமாறியப்

# மைசூர் பாகு செய்யும் முறை



**தேவையான பொருட்கள்:**

கடலை மாவு-ஒரு கிண்ணம், சர்க்கரை - மூன்று கிண்ணம், நெய்- மூன்று கிண்ணம்

**செய்முறை:**

முதலில் வாணலியில் ஒரு கிண்ணம் நெய்யை ஊற்றி கடலை மாவை அதில் வாசனை வரும் வரை வறுத்துக் கொள்ளவேண்டும். கடலை மாவை காய்ந்த நெய்யில் ஊற்றினால் மேலே பொங்கி வரும். அதுவே சரியான பதம். பின்னர் அந்த மாவை வேறு தட்டில் அல்லது பாத்திரத்தில் மாற்றிவிட்டு அதே வாணலியில் மூன்று கிண்ணம் சர்க்கரையோடு அரை கிண்ணம் நீர் சேர்த்து பாகு தயாரிக்கவும்.

பாகு நன்றாகக் காய்ந்துக் கையால் உருட்டினால் மிளகு பதம் வரும்போது வறுத்து வைத்துள்ள மாவைக் கொட்டிக் கைவிடாமல் கிளறவும். கொஞ்சம் கொஞ்சமாய் நெய் சேர்க்கவேண்டும். எவ்வளவு நெய்யைக் கொட்டினாலும் அத்தனையையும் உள் வாங்கிக் கொள்ளும். அதனால் தேவையான அளவே நெய்யை பயன்படுத்தவும்.

மைசூர் பாகு கெட்டிப் பட்டு உருளி அல்லது வாணலியில் ஒட்டாமல் சுருண்டு வரும்போது நல்ல சதுரமான தாம்பாளத்தில் கொட்டிவிட்டுச் சூடாக இருக்கும்போதே வில்லைகள் போடவேண்டும். வில்லைகள் போடும் முன்னர் மேலே கொஞ்சம் சர்க்கரையைத் தூவலாம்.

பொழுது அரசர் இதன் பெயர் என்ன கேட்டர். காகசுர மடப்பா, தான் கண்டுபிடித்த இனிப்பிற்கு அதுவரை பெயரிடாத நிலையில் அவர் மனதில் சட்டென ஒரு பெயர் தோன்றியது.

அந்த பெயர்தான் மைசூர்பாகு. மைசூரில் கண்டு பிடித்தாதால் மைசூரு என்றும், சர்க்கரை பாகை சேர்த்து செய்ததால் பாகு என்றும், இந்த இரண்டையும் இணைத்து இந்த இனிப்பிற்கு மைசூர் பா(க்)கு என்றும் பெயரிட்டார்.

இப்படி உருவான மைசூருப் பாகு அரண்மனையில் மட்டுமே பரிமாறக் கூடிய அரச வகை இனிப்பாக மாறியது மட்டுமில்லாது, அரச குடும்ப கல்யாணம் மட்டும் விசேஷ தினங்களில் பரிமாறப் பட்டது. பின் மெல்ல மெல்ல செல்வந்தர்கள் வீடுகள் வரை பரவிய மைசூரு பாகு சாதாரண குடும்பம் வரை எட்டியது. இது கர்நாடக மாநிலத்தின் பாரம்பரிய உணவாகவே இருந்தது. காலப்போக்கில் மற்ற மாநிலங்களிலும் பரவியது.

கர்நாடகாவில் இருந்து வந்த மைசூரு பாக் இன்று நமது திருவிழாக்களிலும், விஷேச தினங்களிலும் நமது இல்லங்களில் நீங்கா இடம் பிடித்துவிட்டது.

மைசூரு பாக் செய்முறையானது கேட்பதற்கு எளிமையாக இருந்தாலும் செய்வதற்கு பக்குவம் தெரிந்திருக்க வேண்டும். அதுவும் சர்க்கரைப் பாகு காய்ச்சும் முறை, பக்குவம் சரியாக இல்லையென்றால் மைசூரு பாகு, உண்பதற்கு கேற்றவாறு வராது.

அரசக்குடும்பத்தினருக்கு மைசூர்பாகு தயாரிக்கும் போது, அதன் சுவையையும், நறுமணத்தையும் கூட்டுவதற்காக காய்ச்சும் பாகுவில் பன்னீர், தேன், ஏலக்காய் தூள் சேர்த்து காய்ச்சினர். இவ்வாறு சேர்க்கும் பொருளின் சுவையும், நறுமணமும் மைசூர் பாகுவிற்கு மேலும் சுவையைக்கூட்டியது. மைசூர்பாகு செய்முறை ரொம்ப நாட்களாக ரகசியமாக பாதுகாக்கப்பட்டது. பிறகு, அரண்மைனை சமையல்காரர்கள் மூலம், இந்த ரகசியம், அரண்மனையை விட்டு வெளியேறியது.





# கல்யாணமாலை

*exclusive service to US alliance seekers*

**www.kmmatrimony.com**

கல்யாணமாலை வரன் தேடும் தென்னிந்தியர்களின் நெஞ்சத்திற்கு நெருக்கமான பெயர். சன் டிவியில் 16 ஆண்டுகளாகத் தொடர்ந்து கல்யாணமாலை நிகழ்ச்சி ஒளிபரப்பாகி வருகிறது. அத்துடன் கல்யாணமாலை இதழ்,www.kmmatrimony.com, நூற்றுக்கணக்கான நிகழ்வுகள் என வரன் தேடுவோருக்கு 360 டிகிரியில் சேவை செய்கிறது.

3.30 லட்சம் திருமணங்களை முடித்து வைத்துள்ள கல்யாணமாலை (KM Matrimony) நிறுவனம் அமெரிக்க மண்ணில் பல நிகழ்ச்சிகளை நடத்தி வருகிறது. 8K எக்ஸ்பிரஸ் வழியாக வரன் தேடும் அமெரிக்க வாழ் இந்தியர்களுக்காக கல்யாணமாலை அளிக்கும் பிரத்யேக சேவை இது!

– ஆசிரியர்




S Pavithra , 814476, Mudaliar-Thuluva Vellalar, NonVeg, 30, 5.5, Fair. Masters in Clinical Research, PG Diploma in Clinical Research Mgmt, Masters in Organizational Leadersip, Masters in Managing IT, Senior Business Analyst, Texas,USA. Mudaliar/Pillai, B.Tech, MCA, ME, M.Tech, MBA,PhD, Prefly from US/Canada Bridegroom




Nitish Kannan, 810872, Vannia Kula Kshatriyar, Anusham, NonVeg, 28, 5.6, Fair. B.Tech, MS, Automotive Interior Designer, Michigan, USA, Vannia Kula Kshatriyar B.Tech/PG/MCA/M.Tech/ MBA/ACA/ACS/Any Degree Bride.




Tharanidevi K, 751799 Pillai-Sozhia Vellalar, Visagam(4), Siva, Non Veg, 29, 5, Fair. BE (ECE), MSW, MA (MBA), Planning officer, Texas, USA. Pillai BE/B.Tech/MCA/ME/M. Tech/MBA/BL/ML/LLB/ LLM/ACA/FCA/CA/ACS/FCS/ICWA/PhD Already in US / Willing to go to USA Bridegroom.




Kanimozhi, 794807, Viswakarma Achari-Kammalar, Mirugaseerisham, NonVeg, 28, 5.2, Wheatish. B.E., MS in Electrical Engineering, Product Engineer in Power Electronics Manufacturing company, Pvt, Massachusetts, USA. Caste No Bar, ME/MCA/M.Tech/MBA/BE/B.Tech Bridegroom.




K Guruprasad, 767943, Pillai-Karuneegar, Avittam, Veg, 32, 5.9, Wheatish. MS Computer Science, Lead Engineer, California, USA, Pillai/Brahmin (Iyer/ Iyengar)/ Mudaliar/Chettiar (Veg), BE/B.Tech/M.Tech/ MBA, Prefly from USA Bride.




Deepti Sankara Narayanan, 699942, Viswakarma Achari-Goldsmith, Visagam, NonVeg, 28, 5.7, Fair. MS Comp Sc & Engg, Programmer/Analyst, USA, New York, Viswakarma Achari, ME/M.Tech/MBA/ MCA/MBBS/MD/MS/ACA/ PhD/IAS Bridegroom.

To get the details: **usprofile@kmmatrimony.com** **www.kmmatrimony.com**
Call: **510-298-5299 8.00 pm to 8.00 am, (USA any time zone)**



R Aiswarya, 800968, Nadar, Poosam, NonVeg, 28, 5.3, Wheatish. B.Tech, Senior Software Engineer, California, USA. Nadar, B.Tech/BE/MBA/MCA/ ME/M.Tech Bridegroom.



Shankar Hariharan, 806992, Brahmin Iyer-Vadamal, Kiruthigai(4), Srivatsa, Veg, 32, 6, Wheatish. Bsc (Maths), MS (London), IT, California, USA. Brahmin Iyer, PG/UG/BE/B.Tech/ MCA/MBA Bride.

Nishanthi Yuvaraj, 662068 Naidu-Muthuraja, Anusham(1), Poola, Non Veg, 29, 5.4, Wheatish. BE, MS, Software Engineer, Texas, USA. Naidu/ Caste No Bar (Hindu) PG/ME/M.Tech/BE/ B.Tech Bridegroom



Sushma 761138 Brahmin-Iyer,Pooradam, Shadamarshanam,Veg,29,5.2, wheatish, M.Pharm, Clinical Research Associate,Ohio, USA. (Green Card Holder) Brahmin-Iyer/Brahacharanam/ Vadamal, ME/M.Tech/MBBS/ Medicine/MD/MS Bridegroom.





Gowri Prashanth S.M, 812190, Naidu-Gavara, Hastham, Gilakara, NonVeg, 29, 5.10, Wheatish. MS (USA), New Product Launch Engineer, Ohio, USA. Naidu-Gavara,Balija, Gajula, BE/B.Tech/MCA/ ME/M.Tech Bride.



M Sathiya Kumaran, 815650, Maruthuvar, Uthirattadhi(3), NonVeg, 29, 5.9, Fair. B.Tech.( IT), M.S, PhD. Research Assistant, Wis consin, USA. Maruthuvar/ Caste No Bar, M.Tech Bride.

Purushothaman, 799353, Naidu-Gajula, Hastham(3), NonVeg, 33, 5.10, Fair. B.Tech, Software Professional, Illinois, USA, Naidu, BE/B.Tech/ME/ M.Tech/MBA Bride.



V Manikandan, 808439, Father - Nadar, Mother- Vannia Kula Kshatriyar, Barani, NonVeg, 29, 6, Wheatish. B.Tech, MS (USA), Data Scientist,California, USA. Caste No Bar/Inter Caste (Tamil/Telugu/Malayalam), PG/ BE/MCA/ME/UG/M.Tech/MBA/ ML/BL/MBBS/MD/MS/ACA/ ACS/ICWA/PhD/IAS/IPS Bride.





Venkatesh S.R. 764243 Naidu - Balija, Sadhayam(1), Malchetty, Non Veg, 31, 5.10, Fair. MCA, MS (Canada), Mobile Application architeat and developer, Quebec, Canada, (H1B Visa Holder). Caste No Bar, ME/BE/ B.Tech/MCA/M.Tech/MBA Bride.

## சென்னை, சங்கர நேத்ராலயாவின் சேவையில்

# ஹூஸ்டன் பாரதி கலைமன்றம்



**ஹூஸ்டன் பாரதி கலைமன்றம், சென்னை சங்கர நேத்ராலயாவின் வளர்ச்சிப்பணிகளுக்கு உதவும் வகையில் கடந்த ஏப்ரல் 15, 2018 அன்று டெக்சாஸ், பியர்லாந்தில் உள்ள ஸ்ரீ மீனாட்சி அம்மன் ஆலயத்தில் சிக்கில் குருசரண் குழுவினரின் இசைக்கச்சேரி நடந்தது.**

சமீபத்தில் முக்தியடைந்த பூஜ்யஸ்ரீ ஸ்ரீகாஞ்சி காமகோடி ஸ்ரீஜெயேந்திர சரஸ்வதிகளுக்கு அஞ்சலி செலுத்தும் வகையிலும், சங்கர நேத்ராலயாவின் இலவச மருத்துவ சேவைப்பணிகளுக்கு உதவி செய்யும் வகையிலும் இந்த நிகழ்ச்சி நடந்தது.

சிக்கில் குருசரண் இன்று முன்னணியில் இருக்கும் ஓர் இளம் கர்நாடக சங்கீத மேதை. தனது குரல் வளத்தாலும், அபாரமான சங்கீத ஞானத்தாலும், கீர்த்தனைகளையும், சங்கதிகளையும் கையாளும் திறத்தாலும், மிகச்சிறந்த ஒரு இசை விருந்தினை தனது சகாக்கள் ஸ்ரீசஞ்சீவ் குமார் (வயலின்), ஸ்ரீ ஆர் சங்கர நாராயணன் (மிருதங்கம்) ஆகியோருடன் இணைந்து வழங்கினார். மெட்ராஸ் பெவிலியன் ராஜன் ராதாகிருஷ்ணன் இரவு விருந்தினை வழங்கினார்.

பாரதி கலைமன்றத்தின் உறுப்பினர்களுக்கும் ஏனைய விருந்தினர்களுக்கும் இது ஒரு மாபெரும் மகிழ்ச்சியான சென்னை, சங்கர நேத்ராலயாவின் சேவைத்துடிப்பினை ஊக்குவிக்கும் இனிய மாலைப்பொழுதாக அமைந்தது.

### சங்கரநேத்ராலயா கண் மருத்துவமனை

சென்னை சங்கர நேத்ராலயா கண் மருத்துவமனை, காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் ஆலோசனையின்பேரில் டாக்டர் எஸ் எஸ் பத்ரிநாத் 1978 ம் வருடம் ஆரம்பித்தார். டாக்டர் எஸ் எஸ் பத்ரிநாத், சிறப்பான சேவைக்கான பல விருதுகளை பெற்றவர்.

சென்னை, கொல்கத்தா, திருப்பதி மற்றும் ஸ்ரீசிட்டி ஆகிய இடங்களில் முன்னணி மருத்துவமனைகளாக செயல்படுகிறது. சென்னை ஐ ஐ டி யுடன் இணைந்து MESU எனப்படும் சங்கர நேத்ராலயாவின் நடமாடும் அறுவை சிகிச்சை மையம் (MOBILE SURGICAL UNIT) தற்போது மிகச்சிறப்பாகச் செயல்படும் ஒரு திட்டம்.

கடந்த நாற்பது ஆண்டுகளாக நடைமுறைப்படுத்திவரும் சங்கர நேத்ராலயாவின் பின்னணியில், பல தாராள மனப்பான்மை கொண்ட புரவலர்களின் பங்களிப்பும் குறிப்பிடத்தக்க ஒன்றாகும். அவற்றில் சங்கர நேத்ராலயா ஆப்தால்மிக் மிஷன் டிரஸ்ட் எனப்படும் "எஸ்.என்.ஓம் டிரஸ்ட்" (SN OM Trust) ஒரு 501 சி3 அமைப்பாகும். இந்த அமைப்பு எச்.வி. ஆச்சார்யாவின் சிந்தனையில் உதித்த, 1987 ஆம் ஆண்டு முதல் வட அமெரிக்காவில் உள்ள கொடையாளர்களின் பங்களிப்பு மூலம் சென்னை, சங்கர நேத்ராலயாவில் 10,000க்கும் மேற்பட்ட ஏழை நோயாளிகளுக்கு முற்றிலும் இலவசமாக அறுவை சிகிச்சை செய்யப்பட்டுள்ளது.

ஓம் டிரஸ்ட்டின் பிரிவுகள் வாஷிங்டன் டி சி, ஹூஸ்டன், டாலஸ், அட்லாண்டா, நியூ யார்க், லாஸ் ஏஞ்சல்ஸ், சான் ஃப்ரான்சிஸ்கோ மற்றும் சிகாகோ ஆகிய இடங்களில் செயல்படுகிறது. மேலும் விவரங்களுக்கு, கீழ்க்கண்ட நபர்களை தொடர்பு கொள்ளலாம்.

லீலா கிருஷ்ணமூர்த்தி, தலைவர் சங்கர நேத்ராலயா ஓம் டிரஸ்ட் தொலைபேசி எண்: 281-494-9768

எஸ் வி ஆச்சார்யா, முன்னாள் தலைவர் சங்கர நேத்ராலயா ஓம் டிரஸ்ட்

தொலைபேசி எண்: 855-463-1690

ஜெய் மல்ஹோத்ரா டிரஸ்டி,

தொலைபேசி எண்: 713-962-5555

அசோக் வாசன், மேலாண்மை இயக்குநர், சங்கர நேத்ராலயா, சென்னை மற்றும் டிரஸ்டி தொலைபேசி எண்: 281-265 -7745




# ASHWAATH GROUPS

## SAI FARMS

1. **Free Registration of your Farmland,**
2. **Free maintenance,**
3. **10 % Pre-launch Discount**




தமிழ் எக்ஸ்பிரஸ் வட அமெரிக்கத் தமிழர்களின் குரல்! Deals for subscriber's








**Proposed 100% completion date of the project with all features - 21-08-2018.**

Farmland for sale near Trichy-Tamilnadu in a gated community with proposed Shirdi Sai temple, free school for physically challenged, women skill development centre and many more amenities inside, with free maintenance. Immediate registration can be made for your farmland.

Pre-launch discounted price - INR 18 Lakhs for 22 Cent farmland (9600 Sqft)

Actual price after 21-08-2018 - INR 20 Lakhs for 22 Cent farmland (9600 Sqft)

## SRI FARMS




தமிழ் எக்ஸ்பிரஸ் வட அமெரிக்கத் தமிழர்களின் குரல்! Deals for subscriber's





1. **Free Registration of your Farmland**
2. **Free maintenance**



Farmland for Sale near Trichy-Tamilnadu in a gated community with proposed Siva Vishnu temple, Ghosalai, Veda Padashalai and many more amenities inside with free maintenance. Immediate registration can be made for your farmland.

**PRICE INR 18 Lakhs for 22 Cent farmland (9600 Sqft)**

**For Further details Contact:**

**ASHWAATH GROUPS**

TRICHY-Tamilnadu-India, Mr S. Vijay, Cell +91- 95669 45093, +91- 95664 44093
Email Address – ashwaathgroups@gmail.com, Website – www.ashwaathgroups.com

■ விஷ்ணு

# பயமுறுத்தும் எண்கள்

ஒரு கன்னா பின்னா தொடர் - 28

**மதங்களைப் பொறுத்த வரை, எண்களுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படுகிறது என்பதையும், சில எண்களின் மீதுள்ள அதீத பயத்தையும் கடந்த இதழில் பார்த்தோம்.**

ஏன் இந்த பயம்? எங்கிருந்து வந்தது? எதனால் இந்த நம்பிக்கை உண்டானது? சிருஷ்டிக்கப்பட்ட காரணங்கள் நிறையவே உண்டு.

பண்டைய காலத்திலிருந்தே பல எண்களுக்கு பல விதமான குறியீடுகள் சொல்லப்பட்டு வருகின்றன. அதில் முக்கியமாக 666 என்ற எண் பற்றி பல விதமாக பேசப்பட்டு வருகிறது.

13 ம் எண்ணைக் கண்டு இந்த உலகம் எப்படி பயப்படுகிறதோ, அதே போல், 666 என்ற எண்ணும் நடுக்கத்தை உண்டாக்கும் எண். இந்தக் குறியீடு, மிருகத்தின் அல்லது சாத்தானின் எண்ணாகக் கருதப்படுகிறது. கலகத்தின் குறியீடாகக் கருதப்படும் இந்த எண்களைக் கண்டாலோ அல்லது பயன்படுத்தினாலோ சாத்தான்களுக்கு சந்தோஷமாக இருக்குமாம்!

'புக் ஆஃப் ரெவிலேசன்' என்ற மறைந்திருக்கும் உ ண்மைகளை கூறும் புத்தகத்தின் அடிப்படையில், 'ட்ரிபிள் சிக்ஸ்' என்று அழைக்கப்படும் 666 எண் பற்றி கூறப்பட்டுள்ளது.




இந்த புத்தகத்தில் 666 என்பது மிருகம் என்ற சொல்லை குறிப்பதாக சொல்லப்பட்டுள்ளது. அதில், இரண்டாவது பிறக்கும் மிருகமானது முதல் மிருகத்துக்கு மூச்சு சக்தியை கொடுக்கிறது. அந்த சக்தியானது எப்பேற்பட்ட பணக்காரனோ, ஏழையோ, பெரியவரோ, சிறியவரோ அவர்கள் நெற்றியிலோ அல்லது வலது கையிலோ பிற்காலத்தில் 666 என்ற எண் இருக்கும். அதன் மூலம் எல்லோரும் ஞானமும், அறிவும் அடைவார்கள் என கூறப்பட்டுள்ளது.

666 என்பதற்கு சாத்தான் என அர்த்தம் என இதில் எங்கேயும் குறிப்பிடப்படவில்லை என்பது கவனிக்க வேண்டிய முக்கிய விஷயமாகும். அதே போல கிறிஸ்துவர்களின் புனித நூலான பைபிளில் 666 என்ற எண் மனிதனுடன் தொடர்புடையது என கூறப்பட்டுள்ளது. அதாவது, மிருக கடவுளின் அதிகாரத்தை எதிர்க்கும் சக்திகள் கொண்ட மனித கடவுள் அதிகாரம் நிலைக்கும் என அதில் கூறப்பட்டுள்ளது.

கிரேக்க நாடுகளின் பைபிளில் இந்த 666 எண்களை முன்னர் 616 என குறிப்பிடுவார்கள். எவ்வளவு புத்தகத்தில் 666 எண் பற்றி இருந்தாலும், அதற்கு உண்மையான மற்றும் சரியான அர்த்தம் யாருக்கும் தெரியாது என்பதே யதார்த்தம் ஆகும்.

கலகத்தின் குறியீடாகக் கருதப்படும் இந்த எண்களைக் கண்டாலோ அல்லது பயன்படுத்தினாலோ சாத்தான்களுக்கு சந்தோஷமாக இருக்குமாம்!

இந்த 666 என்ற எண் பற்றி பைபிள் மற்றும் கிறிஸ்துவர்களின் நம்பிக்கை சார்ந்த சில விஷயங்கள்

கூறப்படுகின்றன. இது குறித்து இப்போது ஆழமாக செல்ல வேண்டாம்.

மதங்களில் எண்கள் எப்படி முக்கிய காரணியாக இருக்கிறதோ அதேபோல், சின்னங்களும் இருக்கின்றன. நன்மை தரக் கூடிய சின்னங்கள், தீமையை ஏற்படுத்தக் கூடிய சின்னங்கள் என்று இருவகையான நம்பிக்கைகள் இருக்கின்றன.

தீமையான விஷயங்கள் குறித்து சாத்தான், பூதம், அரக்கன் என்று அனைத்து மதங்களிலும் சில விஷயங்களை குறிப்பிடுகிறார்கள். இவற்றை காலம் காலமாக நாம் பின்பற்றிக் கொண்டு தான் இருக்கிறோம். இந்த சின்னங்களை நாம் அடிக்கடி பார்த்திருந்தாலும் இந்த சின்னங்களின் உண்மையான அர்த்தம் தெரிவதில்லை.

அவற்றில் சிலவற்றைப் பார்ப்போம்.

### இந்துக்களின் "ஓம்"

'ஓம்' என்ற இந்து சின்னம் அண்ட சராசரத்தை குறிக்கும். ஓம் என்பதை பிரணவ மந்திரம் என்று இந்துகள் சொல்கிறார்கள். பிரணவ மந்திரமே உலகம் தோன்றுவதற்கு முன் எங்கும் நிரம்பியிருந்ததாக கருதுகிறார்கள். அ + உ+ ம் என்பதன் இணைப்பே ஓம் ஆகும். அ என்பது முதல்வனான சிவனையும், உ என்பது உமையையும் குறிப்பதாகவும் கருதுகிறார்கள். "அ" என்பது சிவனையும், "உ" என்பது உயிரையும் "ம்" என்பது மலத்தையும் குறிக்கின்றன என்பது பொதுக்கருத்தாக உள்ளது.

### "ஸ்வஸ்திக்" சின்னம்

'ஸ்வஸ்திக்' என்பது ஹிந்துக்களுக்கு அமைதியின் சின்னமாகும். இந்த குறியீட்டை பானைகளிலும் வீட்டு முகப்புகளிலும் வரைந்து இருப்பார்கள். ஸ்வஸ்திக் என்பது இந்துக்களை பொருத்தவரை, மங்கலச் சின்னமாகவும் விளங்குகிறது.

செங்கோணவடிவில் மேலிருந்து கீழாகவும், இடமிருந்து வலமாகவும் ஒன்றுக்கொன்று குறுக்கில் செல்லும் கோடுகளே ஸ்வஸ்திக். விநாயகரின் சின்னமாக விளங்கும் இதனைப் பூஜையறையிலும், வாசலிலும் கோலமாக இடுவர். வீட்டு நிலையில் மஞ்சள் குங்குமம் கொண்டு இதை வரைவதுண்டு.



"ஸ்வஸ்திக்' என்றால் "தடையற்ற நல்வாழ்வு' என்று அர்த்தம். ஸ்வஸ்திக்கில் உள்ள எட்டு கோடுகளும் எட்டுத் திசைகளைக் குறிக்கும். எட்டுத்திசைகளிலும், நாம் தொடங்கும் செயல் எவ்வித தீங்கும் நேராமல் இறையருளுடன் இனிதே நிறைவேற வேண்டும் என்பது இதன் தாத்பர்யம்.

விஷ்ணுவின் கையில் இருக்கும் சுதர்சன சக்கரம், ஸ்வஸ்திக் வடிவில் இருப்பதாகச் சொல்வதுண்டு. சூரிய வழிபாட்டிலும் இது இடம் பெற்றிருந்தது.

நவீன மருத்துவ விஞ்ஞானியான டாக்டர் ஹாட்மன்ட் அனர்சட், 'ஆவேயன்டினா'என்னும் மின் அணுக்கருவி கொண்டு 'ஸ்வஸ்திக் ' வடிவத்தை ஆராய்ந்தார். அதன்படி ஒரு லட்சம் போவிஸ் அலகுகள் கொண்ட மின் சக்தி, இந்த சின்னத்திலிருந்து வெளிப்படுவதாக பதிவு செய்துள்ளார் .

இந்துக்களுக்கு புனித சின்னமாக இருக்கும் ஸ்வஸ்திக் சின்னம், யூதருக்கு மரணத்தையும் அழிவையும் குறிக்கும் சின்னமாக விளங்குகி ற து. காரணம் ஹிட்லர்.

யூதர்களுக்கு எமனாக விளங்கிய ஹிட்லரின் நாஜி படையின் சின்னம் ஸ்வஸ்திக். இதனால் யூதர்களுக்கு இந்த சின்னம் என்றாலே வெறுப்பு தான்.

### சிலுவை சின்னம்

சிலுவை என்பது கிறிஸ்துவ மதத்தினரின் புனிதமான சின்னம். மனிதர்களின் பாவங்களை தன் ரத்தத்தால் அழித்த ஏசுவின் துன்பங்களை அது குறிக்கும். உண்மையில் யூதர்கள் மற்றும் ஆரம்ப கால கிறிஸ்துவர்களை ரோமானியர்கள் துன்புறுத்தியதையே இந்த சிலுவை குறிக்கிறது என்று சொல்பவர்களும் இருக்கின்றனர்.

### தாவீதின் நட்சத்திரம் (Star of David)

இரு முக்கோணங்களினால் ஆன ஒரு அறுகோண நட்சத்திரத்தை (Hexagram) 'தாவீதின் நட்சத்திரம்' என்று அழைப்பார்கள். இது, பொதுவாக யூதர்களின் அடையாளமாகவும் யூத மதத்தின் அடையாளமாகவும் ஏற்றுக்கொள்ளப்படுகிறது. இப்போது இஸ்ரேல் நாட்டின் கொடியில் இந்த முத்திரை தான் உள்ளது.

### திரிசூலம்

இந்துக்களை பொறுத்தவரை, திரிசூலம் என்பது ஒரு புனிதமான சின்னம். சிவபெருமானின் அடையாளமாக திரிசூலம் கருதப்படுகிறது. இந்து மதத்தில் உள்ள அம்மன் உள்ளிட்ட பெண் தெய்வங்கள்





தங்கள் கைகளில் திரிசூலத்தை வைத்திருப்பார்கள்.

கிரேக்க மற்றும் ரோமானியர்களின் நம்பிக்கைப் படி, அவர்களின் சமுத்திர கடவுளான பொஸைடான், தன் கையில் திரிசூலத்தை வைத்திருப்பதால் அது கிரேக்க-ரோமானிய சக்தியின் சின்னமாக பார்க்கப்படுகிறது.

கிறிஸ்துவ மதத்தில் திரிசூலத்தை சாத்தானாக கருதுகின்றனர். அதனை "முள்கரண்டி" என்றும் அழைக்கின்றனர்.

#### கன்தா (வாள்)

கன்தா என்பது வாள். இது சீக்கியர்களின் சமயஞ் சார்ந்த சின்னமாகும். அது சக்தி மற்றும் தூய்மையை குறிக்கும். கன்தாவில் கிர்பன் என்ற குறுக்காக உள்ள சிறிய கத்தி ஒன்று காணப்படும். இது அரசியல் ரீதியான சக்தியை குறிக்கும். இரு முனை வாள் ஒன்றே கடவுள் மீதான நம்பிக்கையை குறிக்கும்.

### தீமையின் சின்னங்கள்

#### பெண்டாக்ராம்

ஒரு பெண்டாக்ராம் என்பது ஐந்து முனைகளுடைய ஒரு நட்சத்திரம் போல மேல் நோக்கித் திரும்பி இருக்கும். ஆனால், அந்த நட்சத்திரத்தைத் திருப்பிப் போட்டது போல் சாத்தானின் பெண்டாக்ராம் இருக்கும். மெட்டீரியல் பிரபஞ்சத்தின் நான்கு முக்கிய விஷயங்கள் மற்றும் ஒரு ஆவி ஆகியவற்றின் குறியீடாக இது கருதப்படுகிறது.

மேலும், மனிதனின் இரு கைகள், இரு கால்கள் மற்றும் ஒரு தலை ஆகியவற்றைக் குறிப்பதாகவும் இது அமைந்துள்ளது. இயற்கை மற்றும் மனிதனின் கவுரவ அடையாளமாக மற்றும் கடவுளுக்கு எதிராக இது கருதப் படுகிறது.

#### சர்ப்பம் (பாம்பு)

சாத்தானின் முக்கியக் குறியீடாக சர்ப்பம் பயன்படுத்தப்படுகிறது. மனிதகுலத்தின் வீழ்ச்சிக்கு காரணமான சர்ப்பத்தின் தூண்டுதல் அல்லது தந்திரத்தினால் தான் ஆப்பிளை ஏவாள் புசித்தாள் என்றும், அதனால் கர்த்தரின் சாபத்திற்கு ஆளானாள் என்றும் பைபிள் வசனங்கள் கூறுகின்றன.

#### பிறை

முஸ்லிம் மக்களின் பொதுவான சின்னம் இது. அவர்களின் மத வழிபாட்டில் இந்த சின்னம் முக்கிய இடத்தைப் பிடித்துள்ளது. இவர்களின் கொடிகளிலும் பிறை காணப்படும்.

#### யின் மற்றும் யாங்

சீன சின்னமான இது இயற்கை சமநிலையை எடுத்துக்காட்டும் என்று அர்த்தம் சொல்கிறார்கள் சீனர்கள். ஆண்கள் மற்றும் பெண்களின் ஆற்றல் திறன்களாகவும் இது பார்க்கப்படுகிறது.

#### கை

ஜெயின்களின் சின்னம் இது. அஹிம்சை என்று அர்த்தம். பூரண அஹிம்சையின் மீது நம்பிக்கை கொண்டுள்ளனர் ஜெயின் மதத்தினர். அகிம்சைக்கு எதிரான எல்லாவற்றையும் நிறுத்தச் சொல்லும் செய்கையை கொண்டுள்ளது.

மதங்களை பொறுத்த வரை, எண்களும், சின்னங்களும் முக்கிய பங்கு வகிக்கின்றன. அதேபோல், எல்லா மதங்களிலும் பல மூடநம்பிக்கைகளும் இருக்கின்றன. அதை அடுத்த முறை பார்ப்போம்.

•



# எது தேவை?



**வைர வியாபாரி ஒருவன் தன் வைரங்கள் அனைத்தையும் விற்றுவிட்டு, பணத்தை ஒரு மூட்டையில் கட்டிக் கொண்டு, தன் சொந்த ஊருக்கு திரும்பி கொண்டிருந்தான். வழியில் ஒரு ஆற்றை கடக்க வேண்டி இருந்தது. ஆனால், எதிர்பாராத விதமாக அந்த ஆற்றில் வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது.**

வெள்ளத்தை பொருட்படுத்தாத வைர வியாபாரி, எப்படியாவது ஆற்றை கடந்து சென்றுவிடலாம் என எண்ணி, அந்த ஆற்றில் இறங்கினான். அப்போது வெள்ளம் அவனை நிலை தடுமாற செய்தது.

இதனால் அவன் தன் பண மூட்டையை வெள்ளத்தில் தவறவிட்டான். உடனே "ஐயோ என் பண மூட்டையை வெள்ளம் அடித்து செல்கிறதே யாராவது காப்பாற்றுங்கள்" என்று கதறினான்.

அப்போது, அந்த ஆற்றில் மீன் பிடித்து கொண்டிருந்த ஒரு மீனவனின் காதில் இந்த வைர வியாபாரியின் கதறல் சத்தம் கேட்டது. உடனே அவன் ஆற்றில் குதித்து கடுமையாக போராடி அந்த பணமூட்டையை எப்படியோ மீட்டு எடுத்து கரையை அடைந்தான்.

"இந்த பண மூட்டையை காப்பாற்ற சொல்லி யாரோ கதறினீர்களே, நீங்கள் எங்கு இருக்கிறீர்கள் ? நான் உங்கள் பண மூட்டையை மீட்டுக் கொண்டு வந்துவிட்டேன். வந்து பெற்றுக்கொள்ளுங்கள்" என்று சத்தம் போட்டு அழைத்தான். ஆனால் வெகு நேரம் ஆகியும் யாரும் அதை பெற வரவில்லை.

பிறகுதான் அவனுக்கு புரிந்தது, அந்த பண மூட்டைக்கு சொந்தக்காரர் ஆற்று வெள்ளத்தில் அடித்து செல்லப்பட்டார் என்று. "ஐயோ பாவம், அந்த பணக்காரர் இந்த பண மூட்டைக்கு பதிலாக தன்னை காப்பாற்றும்படி குரல் கொடுத்திருந்தால் அவரை காப்பாற்றி இருப்பேனே" என்று அந்த மீனவன் வருந்தினான்.

இப்படிதான் நாமும் நம் தேவைகளை சில நேரங்களில் இறைவனிடம் சரியாக கேட்காமல், வெறும் பணத்தை மட்டுமே கேட்கிறோம். அதனால் பல நேரங்களில் நாம் நம் வாழ்வில் உயிருக்கு சமமான நிம்மதியை இழக்க நேரிடுகிறது.

# ஜாயிண்ட் அக்கவுண்ட்



**கணவன் -** "என்ன இது மிக்ஸி, கிரைண்டர், புடவைன்னு ஏகப்பட்ட சாமான்களோட வேன்ல வந்து இறங்கிறே....!"

**மனைவி -** "நீங்க தானே சொன்னீங்க.... பேங்குல இருக்கிற நம்ம ஜாயின்ட் அக்கவுன்டை குளோஸ் பண்ணனும்ன்னு. அதைத் தான் செய்துட்டு வர்றேன்."

**காமடி சண்டை**

**கணவன் -** "இப்படி நாம அடிக்கடி சண்டை போட்டுக் கொண்டு இருப்பதை அக்கம் பக்கத்திலே இருப்பவங்கள் பார்த்தா சிரிப்பாங்க... தெரியுமா?"

**மனைவி -** "அப்போ நாம போடுற சண்டை அவ்வளவு தமாஷாவா இருக்கு!"

**பழிக்கு பழி**

**மனைவி -** "வேலைக்காரி உங்க மேலே விழுறாப்லே உரசிட்டுப் போறா.... நீங்க பேசாம நிக்கிறீங்களே...."

**கணவன் -** "திரும்பி வரட்டும்.... பதிலுக்கு நானும் உரசிக் காட்டுறேன் பாரு.

# பிரச்சனை



ஹரி

**புத்தர் ஒரு கிராமத்தில் தங்கியிருந்தார். அப்போது அவரைப் பார்ப்பதற்கு ஒரு இளைஞன் வந்தான். அவனுக்கு வயது இருபத்தைந்துதான் இருக்கும். அவனது கண்கள் கலங்கியிருந்தன. உடல் சோர்ந்து முகம் மிகவும் துயருற்றிருந்தது.**

வெகு தொலைவு நடந்து வந்த அவன், புத்தரைப் பார்த்த அக்கணமே கதறி அழுதான். அவன் அழுது முடிக்கும் வரை பொறுத்திருந்த புத்தர், கனிவாகக் கேட்டார்.

"சகோதரா, ஏன் இப்படிக் கண்ணீர் சிந்துகிறாய்? உனக்கு ஏற்பட்ட பிரச்சனையை என்னிடம் சொல். என்னிடம் பகிர்ந்துகொள்வது உன் மனதுக்குச் சற்று ஆறுதலாக இருக்கும்."

இளைஞன் தயங்கித் தயங்கிச் சொன்னான்: "பகவானே, என் வாழ்க்கையில் நான் எல்லையற்ற துன்பங்களை அனுபவித்து வருகிறேன். எடுத்த எதிலும் தோல்வி. தாங்க முடியாத துயரம். ஆதரவுக்கென்று எனக்கு யாருமில்லை. என் மனது மிகவும் பலவீனமாகப் போய்விட்டது. நான் எப்படி இந்த உலகத்தில் வாழ்வது. எனக்கு ஒரு வழி சொல்லுங்கள். நான் உங்களைப் பார்த்து முறையிடத்தான் பல மைல் தூரம் நடந்து வருகிறேன்."

புத்தர் அன்புடன் புன்னகைத்தார். அவன் தலையை வருடிக் கூர்ந்து பார்த்தார். பிறகு தன் குடிலுக்கு உள்ளே சென்று, ஒரு சிறிய குவளையில் தண்ணீரும் கொஞ்சம் உப்பும் கொண்டு வந்தார். எதற்காக புத்தர் உப்பையும் தண்ணீரையும் கொண்டு வருகிறார் என்று புரியாமல் பார்த்தான் இளைஞன்.

புத்தர், அவன் கையில் தண்ணீர்க் குவளையைக் கொடுத்தார். பிறகு உப்பையும் கொடுத்துவிட்டுச் சொன்னார்: "சகோதரா, இந்தச் சிறு குவளையில் உப்பிட்டுக் கலக்கி அருந்து."

அவன் உப்பைக் குவளையில் இட்டுக் கலக்கி அருந்திப் பார்த்தான். இரண்டு மிடறு குடிப்பதற்குள் அவன் முகம் கோணியது. மேற்கொண்டு குடிக்க முடியாமல் அப்படியே கீழே வைத்துவிட்டுச் சொன்னான்: "என்னால் இந்தத் தண்ணீரைக் குடிக்க முடியவில்லை பகவானே. மிகவும் கரிக்கிறது."

"சரி. முடியவில்லை என்றால் நீ குடிக்க வேண்டாம். விட்டுவிடு" என்ற புத்தர் மீண்டும் தன் குடிலுக்கு உள்ளே சென்று, முன்பு கொண்டுவந்த அதே அளவு உப்பைக் கொண்டு வந்து திண்ணையில் வைத்தார்.

"சகோதரா, நான் உனக்குக் கொஞ்சம் உப்பைக் கொடுத்து, அதைக் குவளை நீரில் கலக்கிக் குடிக்கச் சொன்னேன். உன்னால் முடியவில்லை. இதோ இப்போதும் அதே அளவு உப்பைத் தருகிறேன். இதை நீ எதிரில் இருக்கும் அதோ, அந்தச் சிறு குளத்தில் கரைத்துவிடு!"

புத்தர் சொன்னபடியே அவன் அந்த உப்பை எதிரில் இருந்த குளத்தில் கரைத்தான். கரையில் நின்று பார்த்த புத்தர் சொன்னார்: "இப்போது அந்தக் குளத்து நீரைக் குடித்துப் பார்." உப்பு கரைக்கப்பட்டபோதும் குளத்து நீரில் உப்பின் சுவை கொஞ்சம்கூடத் தெரியவில்லை. அந்த இளைஞன், போதுமான அளவுக்கு நீரை குடித்துவிட்டுக் கரைக்கு வந்தான். "எதற்காக இந்தக் குளத்து நீரில் உப்பைக் கரைத்துக் குடிக்கச் சொன்னீர்கள் என்று தெரிந்துகொள்ளலாமா" என்று பணிவுடன் கேட்டான்.

புத்தர் புன்னகைத்தார்: "சகோதரா, வாழ்வில் நாம் எதிர்கொள்கிற துயரங்கள் எல்லாம் உப்பை போலத்தான். நம் மனம் இருக்கிறதே, அது தண்ணீரைப்போல." இளைஞனுக்கு ஒன்றும் புரியவில்லை. புத்தரைக் குழப்பத்துடன் பார்த்தான்.

தொடர்ந்து சொன்னார் புத்தர்: "நீ சிறிய குவளையில் இருந்த நீரிலும், பிறகு இந்தக் குளத்து நீரிலும் கரைத்தது ஒரே அளவான உப்புதான். ஆனால் சிறிய குவளையில் தண்ணீர் கொஞ்சம்தான் இருந்தது. அதனால்தான் கரிப்புச் சுவை அதிகமாக இருந்தது.

எனவே உன்னால் தண்ணீரைக் குடிக்க முடியவில்லை. ஆனால், அதே உப்பு குளத்து நீரில் கரைக்கப்பட்டிருந்தாலும், அந்த நீரில் உப்பின் சுவை கொஞ்சம்கூடத் தெரியவில்லை அல்லவா. ஏனென்றால் சிறு குவளையில் இருந்த நீரைவிட எண்ணற்ற மடங்கு அதிகமான நீர் குளத்தில் இருக்கிறது.

நம் துயரங்கள், பிரச்சனைகள் என்பவை உப்பைப்போலத்தான். இவை வாழ்க்கை நெடுகிலும் வந்துகொண்டே இருக்கும். இவற்றைத் தவிர்க்கவே முடியாது. ஆனால், நம்மால் நம் மனதை விசாலமாக்க முடியும். இப்போது உன் மனது அந்தச் சிறிய குவளையை போல்தான் இருக்கிறது. அதனால்தான் வாழ்க்கைச் சிரமங்கள் உனக்கு இந்தளவு துயரமளிக்கின்றன.

நீ நிறைய அறிவும் அனுபவங்களும் பெற்று, உன் மனதைப் பெரிதாக்கு. அதை வலுப்படுத்து. அப்போது உன் துயரங்கள் குளத்தில் கரைக்கப்பட்ட உப்பைப்போலக் காணாமல் போய்விடும். அந்தத் தெளிந்த நிலையில்தான் புதிய வழிகள் புலனாகும். அவ்வழிகளில் நீ உயர்வடைவாய்." என்றார்.

புரிந்துகொண்ட இளைஞன் புத்தரின் பாதங்களைத் தொட்டு வணங்கி மகிழ்ச்சியாகத் திரும்பிச் சென்றான்.

இந்த உப்புக் கதையை, அந்த இளைஞனுக்காக





மட்டும் புத்தர் சொல்லவில்லை. நம் ஒவ்வொருவருக்கும் தான் சொல்லி இருக்கிறார். நாமும் அந்த இளைஞனைப்போல தினம் தினம் பிரச்சனைகளையும் துன்பங்களையும் சந்தித்து வருகிறோம். பிரச்சனைகளை தாங்க முடியாமல் உள்ளுக்குள் புழுங்கிக் கொண்டிருக்கிறோம். பிரச்சனையில் இருந்து வெளியே வரும் வழி தெரியாமல் கதறிக் கொண்டிருக்கிறோம்.

பிரச்சனைகளை, நாம் குவளையில் போட்ட உப்பைப் போல நினைக்கிறோம். அதனால் அது நமக்கு கரிக்கிறது. நம்மால் அதை எதிர்கொள்ள முடியவில்லை. தாங்கிக் கொள்ள முடியவில்லை. பிரச்சனைகளை நாம் குளத்தில் போட்ட உப்பைப் போல கருத வேண்டும். அப்போது தான் நம்மால் பிரச்சனைகளை கடந்து செல்ல முடியும். தீர்க்க முடியும். அதிலிருந்து மீளவும் முடியும்.

சதா சர்வ காலமும் நமக்கு ஏற்படும் பிரச்சனைகளை நினைத்துக் கொண்டே, அதை மனதில் போட்டு குழப்பிக் கொண்டே இருக்கிறோம். பிரச்சனைகளில் இருந்து விலகி நிற்கக் கற்றுக் கொண்டால் தான், அதிலிருந்து மீளும் வழி நமக்குத் தெரியும். பிரச்சனைகளை நாம் பக்கத்திலேயே வைத்துக் கொண்டிருந்தால், அதிலிருந்து எப்படி மீள முடியும்?

ஒரு சமயம் ஸ்ரீகிருஷ்ணர், அவரது சகோதரர் பலராமர், அர்ஜுனன் ஆகிய மூவரும் அடர்ந்த வனத்தின் வழியாகச் சென்று கொண்டிருந்தனர். நடு இரவாகி விட்டது. மூவரும் ஒரிடத்தில் தங்கி விட்டு, விடிந்ததும் செல்லலாம் என்று எண்ணினர்.

வனத்தில் துஷ்ட மிருகங்கள் இருக்கும் என்பதால், மூவரும் ஒருசேரத் தூங்கக் கூடாது என்றும், ஜாமத்திற்கு ஒருவராகக் காவல் இருக்க வேண்டும் என்றும் முடிவு செய்தனர். அதன்படி ஸ்ரீகிருஷ்ணரும், பலராமரும் தூங்கச் செல்ல, அர்ஜுனன் காவல் இருந்தான்.

அப்போது திடீரெனப் புகை மண்டலம் சூழ்ந்தது. அதிலிருந்து பயங்கர உருவம் ஒன்று வெளிப்பட்டது. அகன்ற நாசியும், தூக்கிய பற்களும், முட்டைக் கண்களுமாக இருந்தது அவ்வுருவம். மரத்தடியில் இருவர் தூங்குவதையும், ஒருவன் காவல் இருப்பதையும் கண்ட அவ்வுருவம், தூங்கும் இருவரை கொல்வதற்காக அருகில் சென்றது. அதைக் கண்ட அர்ஜுனன் கோபத்துடன் அதைத் தடுத்தான். கோபம் கொண்டு அந்த உருவத்தைத் தாக்கினான் அர்ஜுனன்.

அர்ஜுனனின் கோபம் அதிகமாக அதிகமாக, அந்த உருவத்தின் பலமும் அதன் வடிவமும் பெருகின.





அர்ஜுனன் அதனுடன் கடுமையாகப் போரிட அது பூதாகரமாய் விளங்கியது. ஒரு கட்டத்தில் அது, அர்ஜுனனைப் பலமாகத் தாக்கி விட்டு மறைந்தது.

இரண்டாம் ஜாமம் தொடங்கவும் பலராமரை எழுப்பி விட்டு அர்ஜுனன் தூங்கச் சென்றான். பலராமர் காவல் இருந்தார். அப்போது மீண்டும் அவ்வுருவம் அங்குத் தோன்றி, அர்ஜுனனையும், கண்ணனையும் தாக்க முற்பட்டது. அதைக் கண்டு கோபம் கொண்ட பலராமர் அதனுடன் சண்டையிட்டார்.

அவ்வுருவம் அடிபணிவதாய் இல்லை. பலராமரின் கோபம் அதிகமாக அதிகமாக அவ்வுருவத்தின் பலமும் அதன் வடிவமும் பெருகின. பின்பு, பலராமரையும் பலமாகத் தாக்கிவிட்டு அவ்வுருவம் மறைந்து விட்டது. மூன்றாம் ஜாமம் தொடங்கவும் கிருஷ்ணரைக் காவலுக்கு எழுப்பி விட்டுப் பலராமர் படுக்கச் சென்றார். அப்போதும் அந்தப் பொல்லாத உருவம் தோன்றியது. அதைப் பார்த்த கிருஷ்ணர் கடகடவெனச் சிரித்தார். “ஏன் சிரிக்கிறாய்?!..'' என்றது அந்த உருவம்.

“உனது தூக்கிய பற்களையும், அழகான முட்டைக் கண்களையும் கண்டு தான்..'' என்றார், சிரிப்பை அடக்க முடியாமல். அவர் தன்னைக் கேலி செய்வதைக் கண்டு ஆக்ரோஷத்துடன் அது சண்டையிட்டது.

கிருஷ்ணரோ புன்னகையை மாற்றாமலே சண்டை போட்டார். அவர் சிரிக்கச் சிரிக்க அவ்வுருவத்தின் பலமும் அதன் வடிவமும் குறைந்து கொண்டே வந்தன. கடைசியில் அவ்வுருவம் சின்னஞ்சிறு புழுவாக மாறித் தரையில் நெளிந்தது. ஸ்ரீகிருஷ்ணர் அப்புழுவை எடுத்து ஒரு துணியில் முடிந்து வைத்தார். பொழுது விடிந்தது. பலராமரும் அர்ஜுனனும் எழுந்தனர். இருவரும் இரவில் பயங்கர உருவம் வந்ததையும், அவர்களைத் தாக்கியதையும், அந்த உருவம் வளர்ந்து வளர்ந்து பெரிதானதையும் கிருஷ்ணரிடம் கூறினர்.

அப்போது கிருஷ்ணர் துணியில் முடிந்து வைத்திருந்த புழுவைக் காட்டி, “நீங்கள் இருவரும் தீவிரமாகச் சண்டை போட்ட உருவம் இது தான். நீங்கள் அதனுடன் சண்டை போடும்போது கடுமையாகக் கோபப்பட்டீர்கள். உங்கள் கோபம் கூடக்கூட இதன் பலமும் வடிவமும் கூடின. நான் சிரித்துக்கொண்டே சண்டை போட்டதால், இதன் பலமும் வடிவமும் குறைந்து கொண்டே வந்தது. பின்பு ஒரு புழுவாக மாறி விட்டன. கோபத்தைக் குறைப்பவனே ஞானி” என்றார். அவரைப் போல, நம்மைச் சூழும் அநேக விஷயங்களில் நாம் எதிர்வினை புரியாமல் இருந்தாலே, அவை பிசுபிசுத்துப் போய் விடும்.

கிருஷ்ணரின் இந்த உபதேசம், நமக்கும் பொருந்தும். பிரச்சனைகளை கண்டு நாம் பயப்படாமல், நடுங்காமல், அமைதியாக எதிர் கொண்டாலே பாதி பிரச்சனைகள் காணாமல் போய்விடும். நாம் எப்போது பிரச்சனைகளை கண்டு பயப்படத் தொடங்குகிறோமோ, அப்போது அது நம்மை விட சக்தி வாய்ந்ததாக மாறிவிடுகிறது. அதை தீர்க்கவே முடியாது என்ற எண்ணத்தை ஏற்படுத்தி விடுகிறது.

நிதானமாக யோசித்தால் பிரச்சனைகளை தீர்க்கும் வழி தானாகவே புலப்படும். பிரச்சனை வந்தவுடன் பதற்றத்தில், பயத்தில் நாம் யோசிக்கும் திறனை இழந்து விடுகிறோம். எலியைப் போல... எலி சாதாரணமாக இருக்கும்போது மரத்தால் ஆன பொருட்களை ஓட்டை போட்டு நாசம் செய்யும்.

அதே எலி அதற்கெனவைக்கப்பட்ட மரப்பொறியில் சிக்கிக் கொண்டால், எப்படி தப்பிக்கலாம் என பயத்தில் அங்கும் இங்கும் அலையுமே தவிர, மற்ற மரப்பொருட்களை ஓட்டை போட்டது போல, இம்மரப் பொறியையும் ஓட்டை போட்டு வெளியில் சென்று விடலாம் என யோசிக்கவே யோசிக்காது.

ஆமாம், இப்படி யோசித்தால், அதிகபட்சம் ஐந்து நிமிடத்தில் பொறியையே ஓட்டை போட்டு வெளியேறிவிடும். ஆனால், மரப்பொறியில் சிக்கிய எலியை நீங்கள் ஐந்து நாட்கள் அப்படியே வைத்திருந்தாலும், அது தன்னால் வெளிவர முடியாத ஏதோவொரு பொறியில் அடைத்து வைத்து விட்டது போன்றே அங்கும் இங்கும் அலைபாயும்.

நம்மை யாரும் காப்பாற்ற மாட்டார்களா என ஏக்கத்தோடு பார்க்கும். அதற்கே உயிர் பிழைக்க வழி தெரிந்தாலும் அந்த பதற்றத்தில் அதனது மூளை வேலை செய்யாது. மனிதனும் பல நேரத்தில் இப்படித்தான். பல பிரச்சனைகளில் இருந்து வெளியே வர தெரிந்தும், பொறுமை இல்லாததால் அதிலேயே சிக்கித் தவிக்கிறான். நமக்கு வரும் பிரச்சனைகளையும் கஷ்டங்களையும் தீர்க்க 3 வழிகள் இருக்கின்றன.

முதல் வழி பிரச்சனைகளைத் தீர்க்க வழி தேடுவது.

அடுத்தது, பிரச்சனைகளை ஒதுக்கிவிட்டுச் செல்வது.

இறுதிவழி பிரச்சனைகளை ஏற்றுக்கொண்டு வாழ்வது.

நாம் கடைசி வழிக்கே, அதாவது பிரச்சனைகளை ஏற்றுக் கொண்டு வாழவே பழகிவிட்டோம். துன்பங்களை, சோதனைகளை கண்டு பயந்து ஓடாமல், அதனையே ஏற்று, தம்வசப்படுத்தி வாழ்ந்தவர்கள், அதன் பலனாக மாபெரும் சாதனைகளைப் படைத்திருக்கிறார்கள். எல்லா

பிரச்சனைகளுக்கும் தீர்வு, நம்மிடம் தான் இருக்கிறது. அந்த தீர்வை, கண்டறியும் திறனும், வழிமுறைகள் தான் ஆள் ஆளுக்கு மாறிக் கொண்டே வரும்.

அறிவியல் மேதை தாமஸ் ஆல்வா எடிசன், ஒருசமயம் தனது தொழிற்சாலையில் பெரிய கடிகாரம் ஒன்றை நிறுவினார். தொழிலாளர்கள் அனைவரும் வேலை நேரத்தில் அந்த கடிகாரத்தை அடிக்கடி பார்த்துக் கொண்டே இருந்தார்கள். இதனால் அவர்களுடைய வேலைத்திறன் குறைந்தது. எடிசன் இந்த பிரச்சனையை எவ்வாறு சரிசெய்வது என்று யோசித்தார்.

வேறு யாராவது இருந்தால், ஒன்று அந்த கடிகாரத்தை அங்கிருந்து எடுத்திருப்பார் அல்லது இதற்கென மேற்பார்வையாளர்களை நியமித்து தொழிலாளர்களை வேலையில் கவனம் செலுத்த சொல்லியிருப்பார்கள்.

ஆனால், எடிசன் வேறு விதமாக சிந்தித்து, இந்த பிரச்சனையை மிகச்சுலபமாக ஒரு முடிவிற்குக் கொண்டு வந்தார். எடிசன் தனது தொழிற்சாலையில் பல இடங்களில் பல கடிகாரங்களை பொருத்தி, ஒவ்வொரு கடிகாரமும் வெவ்வேறு நேரத்தைக் காண்பிக்கும்படி செய்தார். இதனால் குழப்பமடைந்த தொழிலாளர்கள் நாளடைவில் மணிபார்க்கும் வழக்கத்தையே விட்டுவிட்டார்கள். அவர் களுடைய வேலைத் திறனும் அதிகரித்தது. நிர்வாகத்திற்கும் தொழிலாளர்களுக்கும் நல்ல பலனும் கிடைத்தது.

நம்மை தேடி வரும் பிரச்சனைகளை நாம் பயமின்றி எதிர்கொள்ளத் தயாராக இருக்க வேண்டும். பிரச்சனைகள் என்பது நம் வாழ்க்கையை செப்பனிட வந்த ஒரு சிறந்த கருவி என்று நினைக்க வேண்டும். உண்மையில், நாம் எதிர்கொள்ளும் பிரச்சனைகள், நம் வாழ்க்கையை முழுமை அடையச் செய்கிறது. எந்த சவாலையும் நம்மால் எதிர்கொள்ள முடியும் என்ற மன உறுதியினை அடிக்கடி நாம் சந்தித்து சரி செய்யும் விதமாக பிரச்சனைகள் நமக்கு ஏற்படுத்துகிறது.

முதலில் பிரச்சனைகளைக் கண்டு பயப்படுவதை நாம் நிறுத்த வேண்டும். பிரச்சனையோடு கைகுலுக்கி, அதை சரி செய்யும் பக்குவத்தை நாம் அடைய வேண்டும். தனிமையில் அமர்ந்து நிதானமாக சிந்திக்க வேண்டும். எல்லா பிரச்சனைகளுக்கும் ஒரு நல்ல தீர்வு இருக்கவே செய்கிறது. அந்த நிரந்தரத் தீர்வைக் கண்டு பிடிக்கவேண்டும். அப்படிச் செய்தால், பிரச்சனைகளை கண்டு நாம் பயப்படவேண்டாம். நம்மைக் கண்டு பிரச்சனைகள் பயப்படும்.

புத்த மதத்தில் மூன்றுமுறை கவனிப்பது என்ற ஒரு குறிப்பிட்ட முறை உண்டு. ஒரு பிரச்சனை



எழுந்தால், உதாரணமாக, ஒருவருக்கு திடீரென்று காம உணர்ச்சி ஏற்பட்டால் அல்லது பேராசை, அல்லது கோபம் வந்தால் அந்த நபர் மூன்றுமுறை அது அங்கே இருப்பதை குறித்து கொள்ள வேண்டும்.

கோபம் அங்கே இருந்தால், சிஷ்யர் உள்ளுக்குள் சொல்லிக்கொள்ள வேண்டும், "கோபம்.. கோபம்... கோபம்'' என்று அதை குறித்துக் கொள்ள வேண்டும். அப்போது உள்ளுணர்வை இழக்காமல் இருப்பார்.

அவ்வளவுதான் - பிறகு அவர் என்ன செய்கிறாரோ, அதை தொடர்ந்து செய்து கொண்டேயிருப்பார். அவர் எதையும் கோபத்தோடு செய்யவில்லை. ஆனால் அதை மூன்றுமுறை குறித்துக் கொள்கிறார். அதை தெரிந்துகொண்ட தருணம், அதை கவனித்து விட்ட தருணத்தில் அது போய்விட்டது. அதனால், அவரை பிடித்துக் கொள்ள முடியாது. காரணம் அது அவர் மயக்கத்தில் இருக்கும் போதுதான் நடக்கும்.

"மூன்றுமுறை கவனிக்கும்போது, நீங்கள் அந்த கோபத்திலிருந்து வேறுபட்டவர் என்பது உங்களுக்கு உள்ளே தெரியவரும். நீங்கள் அதை ஒரு பொருளாக்கலாம். காரணம், அது அங்கே இருக்கிறது. நீங்கள் இங்கே இருக்கிறீர்கள். இதை எல்லாவற்றினுடனும் செய்ய வேண்டும்" என்று புத்தர் தனது சீடர்களுக்கு கூறினார். "சாதாரணமாக, எல்லா கலாச்சாரங்களும் நாகரிகங்களும், பிரச்சனைகளை அழுத்தி வைக்கவே கற்றுக்கொடுக்கின்றன. அதனால் நீங்கள் மெல்ல மெல்ல அதை மறந்தே போகிறீர்கள். நீங்கள் அது அங்கே இல்லவே இல்லை என்னும் அளவுக்கு, நீங்கள் அதை மறந்து போகிறீர்கள்.

அதற்கு நேர் எதிரானதுதான் சரியான வழி. அதை முற்றிலுமாக தெரிந்து கொள்ளுங்கள். அதை தெரிந்துகொண்டால் அதன் மீது கவனம் செலுத்தினால், அது உருகும்" என்கிறார் ஓஷோ.



# இந்த நட்சத்திரங்களை போல, நீங்களும் ஜொலிக்க வேண்டுமா?

"Citizen RJ/Reporter" பயிற்சித் திட்டத்தில் இணைந்து, 8கே ரேடியோவின் Citizen RJ-ஆகவும், 8கே தமிழ் எக்ஸ்பிரஸ் இதழின் Citizen Reporter - ஆகவும் பயிற்சி பெற விருப்பமா?

ஆர்வம் உள்ள யார் வேண்டுமானாலும் எங்களுடன் இணையலாம். வயது தடையில்லை. ஆர்வமும் திறமையும் இருந்தால் போதும்.

உங்கள் சுய விவரம் மற்றும் புகைப்படத்தை எங்களுக்கு அனுப்பி வையுங்கள்: editor@8ktamilexpress.com



**Ayswarya**
Atlanta



**kamal**
Arlington Heights, IL



**Dhivya Raj**
Dallas, Texas



**Harni**
New Jersey



**Priya Raman**
Atlanta, Georgia



**Sindhu Srinivasan**
Maryland



**Priyadarshini**
Manchester , Connecticut



**Magesh Elangovan**
Vermont



**Jayashree**
San Jose, California



**Yasodha**
New Jersey



**Shakthi arul,**
California



**Krishna**
Charlotte ,
North Carolina



**Hema**
Hicksville, Newyork



**Selvi Muthukumar**
Alpharetta, Atlanta



**Kurinji Meena**
California

# Hema Shankar

www.HemaShankar.com



INTERO
REAL ESTATE SERVICES®
*Independently Owned and Operated*




## Buying

**Is it a buyer's or a seller's market right now?**

The answer can turn on a dime and not all buyers are up-to-date with the latest information on market conditions. It almost goes without saying that it can also have serious financial impact on your situation.

## Selling

I like to keep what I call the 3 P's at the top of my mind:
**Passion, Professionalism and Perseverance**.
Because I love what I do, I treat my clients the way I would like to be treated myself. And I never give up. These 3 P's are the keys to the success of my clients, and they are also at the heart of my business.




**Hema Shankar**
REALTOR-ASSOCIATE®

**510.938.4727**

hemashan@yahoo.com
www.HemaShankar.com
CalBRE #01395758






INTERO *Prestigio*






LUXURY PORTFOLIO INTERNATIONAL®

LEADING REAL ESTATE COMPANIES® of THE WORLD

